# ஆசிரியர் குழு

1. திரு. கே. சிவராமன் அவர்கள் M. A.,
சைவ சித்தாந்த தத்துவ விரிவுரையாளர்,
காசிச் சர்வகலாசாலை, காசி.

2. திரு. கே. எம். வேங்கடராமையா அவர்கள் M. A. B. O. L.,
பிரின்ஸிபால், செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்.

3. ராவ்சாஹிப், வித்துவான். திரு. கு. அருணசலக் கவுண்டர் அவர்கள், தலைமைத் தமிழ் விரிவுரையாளர், ம. தி. தா. இந்துக் கல்லூரி, திருநெல்வேலி.

4. திரு. ஆ. சி. ஷண்முகநயினர் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
வழக்கறிஞர், தென்காசி.

5. திரு. டி. எச். விவேகானந்தம் பிள்ளை அவர்கள் B. A., L. T.,
(Verification Officer) இந்து அறநிலைய இலாகா,
20, நுங்கம்பாக்கம் ஹைரோடு, சென்னை – 6.

6. திரு. T. B. சித்தலிங்கம் அவர்கள் M. A.
தமிழ் விரிவுரையாளர், காசி இந்துப் பல்கலைக்கழகம், காசி.

---

T. M. குமரகுருபரன் பிள்ளை B. A., B. L.,
நிர்வாக ஆசிரியர்.

## உள்ளுறை

உ

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 12 | பிலவ-௵ புரட்டாசித் திங்கள் 1-௳ [17-9-61] | இதழ் 9

# சிதம்பரச் செய்யுட் கோவை

## மாணிக்கவாசக அடிகள்



[ கட்டுரை 49 ]

சிவபிரான் தன் வீரம் அனைத்தையும் அடியர்க்குத் தந்து விட்டான். விடினும், வீரத்தின் குறிகளை விட்டபாடில்லை. கையில் மழுப்படை உண்டு. திரிசூலாயுதம் உண்டு. எத்தனை இருக்கினும், அத்தனையும் அம்மையின் அம் மைவிழிப்படைக்கு அவை இளைத்தனவே. படை கட்கடையே அம்மைக்கு. ஐயன் கைப்படைகள் அதன் தலை நிற்கவல்லன அல்லவாயின. அத்தன் இளைப்பை அவன் அத்தப்படைக்கு ஏற்றிடின் தவறு யாது? ''கைத்தலத்து அழற் கணிச்சி வைத்து''ள்ளான், எவன்? ''முத்தலைப்படைக்கரத்து எம் அத்தன்''. ஆட மாட்டாதவளுக்கு அஞ்சாறு மத்தளம். கடைக்கண்ணே அம்மையின் படை. வேறு படையே இல்லை. வேண்டுவதும் இல்லை. கணிச்சியும்

முத்தலைவேலும் அக் கட்கடைப் படை எதிர் நில்லாவாயின. ஏன்? அத்தன் இளைத்தான். அவனுடைய படைகளும் இடைந்தன. அவன் வலப்புறத்தான். அம்மையார் இடப்புறத்தார். வலம் வலம் இன்றி இளைத்தது. இடமோ வலமே இன்றென நின்று வலத்தையே விளக்கிற்று. இடப்புறத்து அம்மையாரே வலப்புறத்தாரை வென்ற திறலுடையவர். வலப்புறத்து அப்பனர் திறலின்றி இளைத்தவராவார். ஆயினும், அவரை 'இளைத்ததிற லோர்' என்று நகைச்சுவை தோன்றக் குறித்தார் ஆசிரியர்.

"கைத்தலத் தழற்கணிச்சி வைத்துஇடப்புறத்து ஒருத்தி
கட்கடைப்படைக்கு இளைத்த திறலோராம்
முத்தலைப்படைக்கரத்து எம் அத்தர் சிற்சபைக்குள் நிற்கும்
முக்கண் நக்கர்".

'முக்கணக்கர்' என்று கொண்டு, சோழ நாட்டுக் கணக்கர் மூவர் சேர்ந்தால் அவ்வொரு கணக்கர்க்கு ஒப்பாவர் என்று கூறல் வேண்டும் என்று (இதை எழுதும் பொழுது) புலவர் ஒருவர் சொல்லிவிட்டுச் சிரித்தார். 'நானும் சிரித்தேன். இதைப்படிப் பவரும் சிரிக்கலாமே'! அப்புலவர் பெரிய சிலேடைப் புலவர்.

அவர்க்குத் தன் நிலைமையைச் சொல்ல ஓர் ஆளும் இல்லாமல் தடுமாறுகின்ருள் ஒருத்தி. அவள் நிலைமைதான் என்ன? அதுதான் அவன்பாற் காதல் கொண்டு, அக்காதலைத் தக்கவாறு பயன்படுத்திக் கொள்ளும் வாய்ப்புக்கு இடம் இல்லாது தடுமாறும் பரிதாபநிலை (விரகதாபஸ்திதி). காமன் உமை வாமனுக்கே கணையைவிட்டுக் காமம் விளைத்தான் என்று தெரிந்திருந்தும், விரகதாபம் அதைமறப்பித்தது. அம்மறப்பால், தன்பால் அணையும் காமபாணப்ரயோகத்தை அச் சிவன்பால் அணைந்து அறிவிக்க எவன்பால் எவள்பால் சொல்லலாம் என்று கவன்ருள். எவனும் எவளும் நேர்ந்தாரல்லர். இக் காலவழக்கு நோக்கி ஆண்பாலும் பொருந்தும்.

காமனை யெரித்த கடவுள், தன்பால் அம்பை ஏவும் காமனை அழிக்க இசைவான் என்று கருதினள் போலும். காமனை அழிப்பதே அவள் கருத்து. அதற்கு அவள் அவ (சிவ) னொடு கலப்பதே உபாயம். அக்கணையால் அவள் படும்பாட்டை

வக்கணையாக அரன்பாடு சென்று பாட வல்லார் யாவர் உளர்? இருப்பினும் அவள் காமத்தை அவனிடம் சொல்ல என்ன தலை யெழுத்து? சிவன் சருவலோக சக்கிரவர்த்தி. அவனுக்குப் பலர் குடந்தைச் செயல் புரிய உடந்தையா யிருப்பர். அவருள் ஒருவரா வது என் நிலைமையை அம்மன்னர்பிரானுக்குச் சொன்னால் என்ன குறைவுண்டாகும்? ஈரிடத்திலும் கையூட்டு எய்துமே என்று இக்காலப் பழக்கத்தை ஒட்டியும் எண்ணிச் சொல்கிறாள் காதல் கொண்டாளொருத்தி. அதுதான் இது :-

"முக்கண் நக்கருக்கு ஒருத்தர் மொழியாரோ". எதை மொழியாரோ? கண்ணீர் ஒழுகக்கலங்கும் நிலைமையைச் சொல்லி யுதவாரோ? கண்ணீர் முத்து முத்தாகச் சொட்டுகின்றது. நெடியவேல் போலும் கண் ஆதலின் 'நெட்டயிற் கண்' ஆயின அவை. அக்கண் காமக்கண்ணால் உண்டான இடுக்கண் உற்ற மையால் இடுக்கண் ஆயின. 'இடுங்கு கண்' என்பதே இடுக் கண் என்று மருவிற்று. கண் இடுங்குதல் காரியம். துன்பம் காரணம். காரியத்தைச் சொல்லிக் காரணத்தைக் குறிக்கும் முறைமையால், 'இடுக்கண்' என்னும் சொற்றொடர் துன்பத்தை உணர்த்துகின்றது. 'நெட்டயிற்கண்' இடுக்கணால் முத்து முத்தாக நீர் சொரியும் நிலையை எய்தி நித்திலக்கண் ஆயின. நித்திலம் - முத்து. மன்மதன் தன்மதம் வழுவாமல், அம் மங்கை யின் கொங்கையை அணையக் கணையைத் தொடுத்துச் செழுங் கண்ணை அழுங்கண் ஆக்கி வருகின்றான். அச்செயலை நச்சயில் பிச்சனுக்கு எச்சரிக்கை செய்ய யாரும் இல்லையே என்பது அக் காமக்கண்ணியின் வருத்தம். அதைக் குமரகுருபரர் அருளிய சுவைமிக்க சொற்றொடர்களையும் பொருளமைதியையும் பல முறைபடித்து இன்புறல், கற்றறிந்தார் நல்வினைப் பயனாகும். ஆயினும், பலமுறை படித்துக்கொண்டு காமம் உற்று எண்ணத் தைக் கெடுத்துக் கொள்ளல் ஆகாது.

'நித்திலத்தினைப் பதித்த கச்சு அறுத்து, அடிக் கனத்து நிற்கும் அற்புதத்தனம்' என்பது கொங்கையின் பிரதாபம். நித்திலக் கச்சு அணிந்த காலம் வேறாயினும், அதனினும் சிறந்த கச்சு இக்காலத்தில் உளது. அதில் முத்துப்போலும் தோற்றம் உள்ளது. அதைக் கொண்டு தைக்கும் கச்சு என்னைப்

போலும் கிழவனையும் கிழத்திக்குரிய கிழவனுக்கும். 'நித்திலக் கச்சு' முன்னரும் போந்துளது 'நீர்மங்கை கொங்கைக்கு நித்திலக்கச்சு ஒக்குமால்' என்பது அது.

இது சந்தப்பா என்ன அமைந்தும் அந்தப்பாவாக ஆசிரியர் அடிக்குறிப்பில் இல்லை. 'இது பதின் சீர்க்கழி நெடிலடியால் வந்த ஆசிரிய விருத்தம்' என்று உளது, எனக்கு அது விளங்கவில்லை.

"கைத்த லத்த ழற்க ணிச்சி வைத்தி டப்பு றத்தொ ருத்தி
கட்க டைப்ப டைக்கி லைத்த திறலோ ராம்
முத்த லைப்ப டைக்க ரத்தெம் அத்தர் சிற்ச பைக்குள் நிற்கும்
முக்கண் நக்க ருக்கொ ருத்தர் மொழியா ரோ?
நித்தி லத்தி லைப்ப தித்த கச்ச றுத்த டிக்க னத்து
நிற்கும் அற்பு தத்த னத்தி னிடையே வேள்
அத்தி ரத்தி லைந்தொ டுத்து விட்டு கெட்ட யிற்க ணித்தி
லக்க னுற்றி டச்செய் விக்கும் அதுதா னே".

[தொடரும்]

# மதுரைக் கலம்பகம் உரைநடை



தருமபுர ஆதீன வித்துவான்
"திருவண்ணுமலை ஆதீனவிரிவுரையரசு, மதுரை ஆதீனச் சித்தாந்த
சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர்மாமணி, பாலகவி"
வயிநாகரம் திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

---

காப்பு

பூந்தித் தடத்துப் புலக்களி ரோடப் புளிறுதொந்தித்
தந்திக்குத் தந்தை தமிழ்க்குத வென்பதென் றண்மலர்தூய்
வந்திப் பதுந்தனி வாழ்த்துவ தும்முடி தாழ்த்துநின்று
சிந்திப் பதுமின்றிச் சித்தி விநாயகன் சேவடியே!

– ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்.

சித்தி விநாயகப் பெருமானது திருவடிகளில் குளிர்ந்த மலர்களைத் தூவி வணங்குவதும் ஒருமைப்பாட்டுடன் இருந்து வாழ்த்துவதும் தலைதாழ்த்து நின்று தியானிப்பதுமாகிய இவைகளைச் செய்வதல்லாமல் மனமாகிய இடத்தில் ஐம்புலன்களாகிய யானைகள் அஞ்சியோடும்படி பேரொலி எழுப்புகின்ற பெருவயிற்றையுடைய யானைமுகக் கடவுளது தந்தையாகிய சொக்கேசர் பொருட்டுச் செய்கின்ற இத்தமிழ் நூலுக்கு உதவுக என்று ஏன் வேண்டுதல் வேண்டும்?

நூல்

மணிகொண்ட திரையாழி சுரிநிமிர மருங்கசைஇப்
பணிகொண்ட முடிச்சென்னி யரங்காடும் பைந்தொடியும்

பூந்தொத்துக் கொத்தவிழ்ந்த புனத்துழாய் நீழல்வளர்
தேந்தத்து நறைக்கஞ்சத் தஞ்சாயற் றிருந்திழையும்

மணக்கிழவன் றிருமார்பு மணிக்குறங்கும் வறிதெய்தத்
தனக்குரிமைப் பணிபூண்டு முதற்கற்பின் றலைநிற்ப

அம்பொன்முடி முடிச்சூடு மபிடேக வல்லியொடும்
செம்பொன்மதிற் றமிழ்க்கூடற் றிருநகரம் பொலிந்தோய்கேள்.

இரத்தினங்களை உள்ளே கொண்ட அலைகளையுடைய கடலை மடிப்பு நிமிரும்படி இடையிலே சுற்றிலும் உடுத்துப் படத்தைக் கொண்ட முடிசூடிய ஆதிசேடனது தலையாகிய அரங்கத்தில் நடனமாடுகின்ற பசிய வளையல்களை அணிந்த பூமாதேவியும்; அழகிய பூங்கொத்துக்கள் முறுக்கு அவிழப்பெற்ற கொல்லை யில் உண்டாகின்ற திருமாலின் மார்பிலணிந்த திருத்துழாய் மாலையின் நிழலிலே உறைகின்ற தேனையுடைய தாமரைப்பூவில் வசிப்பவளாகிய அழகிய சாயலையுடைய திருந்திய ஆபரணங் களை அணிந்த சீதேவியும்; இல்லாளனுகிய திருமாலினது திருமார்பும் அழகிய தொடையும் வறுமையை அடையும்படி தமக்கு உரிய அடிமைத் தொழிலை மேற்கொண்டு முதன்மை யான கற்பொழுக்கத்தில் தலைநிற்கும்படி, அழகிய பொன் முடியை முடியிலே சூடிய அபிடேகவல்லி யென்னும் மீனுட்சி யம்மையுடனே செம்பொன் மயமான மதில்களையுடைய செந் தமிழ் வழங்கும் கூடற் றிருநகரத்திலே விளங்குகின்ற சொக் கேசப் பெருமானே! கேட்பாயாக.

விண்ணரசும் பிறவரசும் சிலரெய்த விடுத்தொருநீ
பெண்ணரசு தரக்கொண்ட பேரரசு செலுத்தினையே.

தேம்பழுத்த கற்பகத்தி னறுந்தெரியல் சிலர்க்கமைத்து
வேம்பழுத்து நறைக்கண்ணி முடிச்சென்னி மிலைச்சினையே.

வானேறுஞ் சிலபுள்ளும் பலரங்கு வலனுயர்த்த
மீனேறே வானேறும் விடுத்தடிக ளெடுப்பதே.

மனவட்ட மிடுஞ்சுருதி வயப்பரிக்கு மாறன்றே
கனவட்டந் தினவட்ட மிடக்கண்டு களிப்பதே.

விண்ணூறு தலைமடுப்ப நனையாநீ விரைப்பொருநைத்
தண்ணூறு குடைந்துவையைத் தண்டுறையும் படிந்தனையே

பொழிந்தொழுகு முதுமறையின் சுவைகண்டும் புத்தமுதம்
வழிந்தொழுகுந் தீந்தமிழின் மழலைசெவி மடுத்தனையே.

விண்ணுலகத்து அரசாட்சியும் மற்றை உலகங்களின் அர சாட்சியும் சிலர் அடையும்படி கொடுத்துவிட்ட ஒப்பற்றவனுகிய நீ, மீனுட்சியம்மையாகிய பெண்ணரசி தரப்பெற்றுக் கொண்ட

பெரிய பாண்டிய நாட்டு அரசாட்சியைச் செலுத்தினுய்; இனிமை மிக்க கற்பகத்தருவின் நல்ல மலர் மாலைகளைச் சிலருக்கு அமைத்துக் கொடுத்துவிட்டு, வேப்பம் பூக்களால் தொடுக்கப் பெற்ற மணமுள்ள மாலையை, முடியையணிந்த தலையில், சூடினுய்; வானத்திற் பறக்கின்ற கருடன் முதலிய பறவைகளையும் பலர் மற்றை உலங்களில் வெற்றிக்கு அடையாளமாக உயர்த்த, இடப வேற்றையும் விடுத்து மீனக்கொடியையோ அடிகள் உயர்த்துவது? கனவட்டம் என்னும் பெயரையுடைய பட்டத்துக் குதிரை தினந்தோறும் நாட்டியமாடுவதைக் கண்டு மகிழ்வது, ஞானிகளது மனத்திலே நின்று சுற்றுகின்ற வேதமாகிய வெற்றியையுடைய குதிரைக்கு ஒப்பாகா தல்லவா? ஆகாய கங்கையானது தலையிலே நிரம்பியிருக்க அதனுல் நனையாத நீ மணமுள்ள தாமிரபர்ணியின் தண்ணிய நீரிற் குடைந்து வைகையின் குளிர்ந்த துறையிலும் படிந்தாய்; மிகுந்தெழுந்து சிந்துகின்ற பழய வேதங்களின் சுவையை அருந்தியும் புத்தமுதம் வழிந்து ஒழுகுகின்ற இனிய தமிழின் இளமை நலத்தைச் செவிமடுத்தாய்.

அவனவ ளதுவெனு மவைகளி லொருபொருள்
இவனென வுணர்வுகொ டெழுதரு முருவினை.

இலதென வுளதென இலதுள தெனுமவை
அலதென அளவிட அரியதொ ரளவினை.

குறியில னலதொரு குணமில னெனநினை
அறிபவ ரறிவினு மறிவரு நெறியினை.

இருமையு முதவுவ தெவனவ னெனநின
தருமையை உணர்வுறி னமிழ்தினு மினிமையை.

அவனும் அவளும் அதுவும் என்று சொல்லப் பெறுகின்ற மூவகைப் பொருள்களில் ஒரு பொருள் இவனென்று ஆன்ம உணர்வைக் கொண்டு எழுதுதற்கரிய உருவத்தை உடையாய்; இல்லாததென்றும் உள்ளதென்றும், இல்லாததும் உள்ளதுமாகிய இவைகள் அல்லாததென்றும் அளவிடுதற்கரியதாகிய ஒப்பற்ற அளவையுடையாய்; உருவமில்லாதவன் அல்லாமலும், ஒரு குணமில்லாதவன் என்று உன்னை அறிபவர்களது அறிவிலும் அறிதற்கரிய நெறியினை உடையாய்; இம்மை மறுமையாகிய இரு

வகை நலங்களையும் உதவுவது யார்? அவனே நீ என்று உனது அருமைப் பாட்டை உணரும்போது நீ அமுதத்தைப் பார்க்கிலும் இனியவனுயிருக்கின்ருய்.

வைகைக்கோ புனற்கங்கை வானதிக்கோ சொரிந்துகரை
செய்கைக்கென் றறியேமாற் றிருமுடிமண் சுமந்ததே.

அரும்பிட்டுப் பச்சிலையிட் டாட்செய்யு மன்னையவள்
தரும்பிட்டுப் பிட்டுண்டாய் தலையன்பிற் கட்டுண்டே.

முலைகொண்டு குழைத்திட்ட மொய்வளைகை வளையன்றே
மலைகொண்ட புயத்தென்னீ வளைகொண்டு சுமந்ததே.

ஊன்வலையி லகப்பட்டார்க் குட்படாய் நின்புயத்தோர்
மீன்வலைகொண் டதுமொருத்தி விழிவலையிற் பட்டன்றே.

உனது திருமுடியிலே மண்ணைச் சுமந்தது வைகையாற்றுக்கோ அல்லது நீர்மிகுந்த கங்கையாகிய பெரிய நதிக்கோ சொரிந்து கரை அமைத்தற்கென்று நாங்கள் அறியோம்; அரும்பையும் பச்சிலையையும் இட்டுப் பூசித்து ஆட்படுகின்ற அன்னையாகிய வந்தியம்மை தந்த பிட்டை அவளது தலையன்புக்குக் கட்டுப்பட்டுப் பிட்டு உண்டாய்; தனது கொங்கைகளைக் கொண்டு குழையும்படி செய்த நெருங்கிய வளையல்களை அணிந்த உமாதேவியின் கை வளைகளல்லவே இவைகள்? அங்ஙனமிருக்க மலை போன்ற தோள்களில் நீ வளையல்களைத் தூக்கிச் சுமந்தது ஏன்? ஊன் வலையில் அகப்பட்டவர்களுக்கு உட்படமாட்டாய்; நினது புயத்தில் ஒரு மீன்வலையைக் கொண்டு நின்றது, ஒப்பற்ற மீனுட்சியம்மையின் விழி வலையிற்பட்டல்லவா?

போகமாய் விளைந்தோய்நீ, புவனமாய்ப் பொலிந்தோய்நீ,
ஏகமாய் இருந்தோய்நீ, எண்ணிறந்து நின்ருேய்நீ,
வானும்நீ, நிலனும்நீ, மதியும்நீ, கதிரும்நீ,
ஊனும்நீ, உயிரும்நீ, உளதும்நீ, இலதும்நீ.

உயிர்கள் நுகருகின்ற போகப் பொருள்களாய் விளைந்தவனும் நீ. உலகங்களாக விளங்குபவனும் நீ. ஒருவனுக இருந்தவனும் நீ. எண்ணிறந்த உயிர்களாக நின்றவனும் நீ. வானமும்

நீ. நிலமும் நீ. சந்திரனும் நீ. சூரியனும் நீ. ஊன் பொதிந்த உடம்பும் நீ. அதை இயக்குகின்ற உயிரும் நீ. உள்ள பொருளும் நீ. இல்லாத பொருளும் நீ.

பொன்பூத் தலர்ந்த கொன்றைபீர் பூப்பக்
கருஞ்சினை வேம்பு பொன்முடிச் சூடி
அண்ணலா னேறு மண்ணுண்டு கிடப்பக்
கண்போற் பிறழுங் கொண்டைவல னுயர்த்து
வரியுடற் கட்செவி பெருமுச் செறியப்
பொன்புனைந் தியன்ற பைம்பூண் தாங்கி
முடங்குளைக் குடுமி மடங்கலந் தவிசிற்
பசும்பொ னசும்பிருந்த பைம்பொன் முடிகவித்தாங்
கிருநிலங் குளிர்தூங் கொருகுடை நிழற்கீழ்
அரசுவீற் றிருந்த ஆதியங் கடவுளின்
பொன்மலர் பொதுளிய சின்மலர் பழிச்சுதும்
ஐம்புல வழக்கின் அருஞ்சுவை யறியாச்
செம்பொருட் செல்வநின் சீரடித் தொழும்புக்
கொண்பொருள் கிடையா தொழியினு மொழிக
பிறிதொரு கடவுட்குப் பெரும்பயன் தருஉம்
இறைமையுண் டாயினு மாக குறுகிநின்
சிற்றடி யவர்க்கே குற்றேவல் தலைக்கொண்
டம்மா கிடைத்த வாவென்று
செம்மாப் புறூஉந் திறம்பெறற் பொருட்டே. – 2

பொன் போலப் பூத்து மலருகின்ற கொன்றை பசலை நிறத்தை அடையும்படி பெரிய கிளைகளையுடைய வேப்பம் பூவைப் பொன்முடியிலே சூடி மேலாகிய இடபவேறு மண்ணை யுண்டு கிடக்கும்படி கண்ணைப் போலப் பிறழுகின்ற மீனக் கொடியை வெற்றிக்கு அடையாளமாக உயர்த்தி வரிகளையுடைய உடம்புள்ள பாம்புகள் பெருமுச்செறியும்படி பொன் புனைந்து செய்யப்பெற்ற பசிய ஆபரணங்களைத் தாங்கி மடங்கிய பிடரிமயிரையுடைய சிம்மாசனத்தில் பசிய பொன் நெகிழ்ந்திருக்கப் பெற்ற நல்ல முடியைத் தாங்கிப் பெரிய நிலத்திலுள்ள உயிர்கள் குளிர்தூங்குகின்ற ஒப்பற்ற குடை

(தொடர்ச்சி 498-ம் பக்கம் பார்க்க)

# ஸ்ரீ சொக்கநாதசுவாமி திருவருட்பா

மாணிக்கவாசக அடிகள்

கட்டுரை – 8

[மலர். 12. இதழ் 8. பக்கம். 456-இன் தொடர்ப.]

(3) "விரிதிரைக் கடலிற் பரிமுகத் தெரியில்
மேவிய நஞ்சம்அங் கயின்ருய்
வெண்டலை மாலை கண்கொடு கேட்கும்
வெஞ்சின அரவணி நயந்தாய்
மருவொரு சிறிது மருவிலா எருக்கும்
மத்தமும் அத்தியும் மகிழ்ந்தாய்
மதியிலா திருண்ட மனத்தினேன் றன்னை
வஞ்சனென் றிகழுதல் வழக்கோ?

(2) துரியமும் கடந்த சுகபர வொளியே
சூக்கும மாகிய வெளியே
தோற்றமும் அழிவும் ஆற்றிடும் மருந்தே
சூழு(ம்)மா தவர்க்கொரு விருந்தே

(1) திரிதரு கதிரோன் பரிநிழல் ஒதுங்கிச்
செல்லஓங் குறுபொழில் இலங்கிச்
சிறந்திடும் தருமை வளர்சொக்க நாதச்
செல்வமே சிற்சுகோ தயமே."

1. செங்கதிரோன் தேரிற் பூட்டிய குதிரையேழும் இளைப்பாற்றிக் கொள்ளும் பொருட்டுத் தருமையம்பதியின் நெடுஞ்சோலைநிழலில் சிறிது நேரம் ஒதுங்கியிருந்து செல்லும் எனின், அதன் உயர்ச்சிக்கு, இதைக் கற்போர் நெஞ்சம் வஞ்சம் இன்றி உயர்ச்சி அடைதல் வேண்டும். இன்றேல் இதனை இசையாது.

பொழிலும் மேல்மேல் ஓங்கி வளர்கிறது. ஏன்? கதிரவன் தேர்க்குதிரைகளும் பிறவும் தன்நிழலால் தண்மை உறல் வேண்டி. அதனுல்; 'கதிரோன்பரி நிழ(லி)லொதுங்கிச் செல்ல

ஓங்குறு பொழில்' எனப்பட்டது. கதிரோனும் வெயிலோடு திரிதருபவர். அவனும் அப்பொழிலது நிழலில் ஒதுங்குதல் கூடும். கதிரோனும் அவன் பரிகளும் நிழலில் ஒதுங்கிச் செல்லப் பொழில் ஓங்குவதாகக் கொள்ளும் வண்ணம் பாடல் அமைந்துளது.

அத்தகைய பொழில் இலங்கிச் சிறக்கும் பெருமை தருமைக்கு உளது. அது முக்காலத்தும் நிலைபேறுடையது. அழியாத சிறப்பு அத் தருமைக்கு உரியது. காரணம் சொக்க நாதன் திருக்கோயில் கொண்டிருப்பதும் சிவஞானச் செல்வர் கள் வழிவழியாக வீற்றிருந்து வரும் மாட்சியும், இவற்றினும் சிறந்த காரணம் வேறு உண்டோ? உளதேனும் அதுவேண்டத் தக்கதன்று. இத்திருவிருத்தத்தைப் பாடியருளிய சிவஞான மூர்த்தி தம் திருக்கையால் அபிடேகம் புரிதல் முதலிய காலங் களில் ஏந்தி, முன்னிலையில் உருகிப் பாடிய நிலையில், நம் உணர்வை நிறுத்தி உணர்வது இங்கு வேண்டற் பாலது. அவர்க்குத் தருமைச் சிறப்பு யாதாக இருக்கும்? அக்காலத் திருந்த சிவஞானச்சூழல் இன்றும் தருமையைச் சூழ்ந்து பல காதம் பரவி, அன்பர் அகத்தில் அச்சம் விளைக்கிறது. அங் கிருந்து அநுபவம் உற்றவர்க்கே இவ்வுண்மை இனிது விளங் கும். பொய்ப்பொருள் வேட்கையுற்று மெய்ப்பொருள் வேட்கை யற்று எய்ப்பவர்க்கு இது தெரியுமோ? சிற்சுகோதயம் வாய்க்குமோ?

துரியாதீதமான சுகபரப்ரகாசம். அதிசூக்குமாகாசம். படைப்பும் காப்பும் அழிப்பும் மறைப்பும் அளித்தருளவும் ஆகிய ஐந்தொழிலும் இடைவிடாது செய்யும் (உயிர்களைப் பற்றிய ஆணவமலத்துக்குத் தனிஞான) மருந்து, மஹாதபோநிதி களுக்குப் பெரியதோரின்ப விருந்து. அதுவே தருமைச் சொக்க நாதச் செல்வம் சிற்சுகோதயம்.

அதை முன்னிலையாக்கி விண்ணப்பிக்கும் பொருள்இது:– பாற்கடலுள் அமுதம் தோன்றிற்று. நஞ்சும் விஞ்சிற்று. அமுதத்தை அமரர் முதலோர்க்கு அளித்தாய், எவரும் வேண் டாத நஞ்சத்தை அருந்தினை, தலைமாலையும் அணிந்தாய், 'கட்

செவி' (-கண்ணுற் காணும் அளவு கேட்குஞ்செவி. கண்ணே செவி என்று இருவேறு பொருள் கொண்டனர் முன்னோர்) எனப் படும் பாம்பையும் ஆபரணமாகப் பூண்டாய், 'சர்ப்பாபரணன்' என்னுந் திருநாமமும் பெற்றாய். சிறிதும் மணம்இல்லாத எருக்கம் பூவையும் ஊமத்தமலரையும் எலும்பையும் உவந்து கொண்டனை, நீ வேண்டுதலும் இல்லாய். வேண்டாமையும் இல்லாய். உயர்ந்ததையும் கொள்வாய். இழிந்ததையும் கொள் வாய். [அப்பர், சம்பந்தர், சுந்தரர், மணிவாசகர் ஆகிய ஆசிரியர் நால்வர் அரும்பெரும் பாடல்களைக் கேட்ட திருச்செவியில், உன் கையில் உள்ள மானின் ஒலியையும் திருச்செவியில் ஏற்றுக் கொண்டுள்ளாய்]. இந்நிலைமை உனக்கு இயல்பாதல் மட்டும் அன்று. மிக்க பயிற்சியும் ஆனது. அப்பயிற்சியில், மிகப்பெரிதும் உயர்வு பூண்ட அடியார் பலரை ஆட்கொண்டது போல அடியேனையும் ஆட்கொள்ளல் நியாயம் ஆகும். அறியா மையால் இருண்ட அகத்தினேன் என்று என்னைத் தள்ளிவிடல் நியாயம் ஆகாது.

"பொய்யினேன் புலையினேன்" எனத்தொடங்கும் தாயு மானவர் திருப்பாடலை ஈண்டுப்பாடிப் பரவசம் அடைதல் நன்றாகும். 'அரும்பொனே மணியே' என்று தொடங்கும் (அவர் அருளிய) பாடலையும் பாடி வேண்டி அருள் பெறுதல் ஈண்டுச் சாலச் சிறந்ததாகும்.

---

(தொடரும்)

(முன் 495-ம் பக்கத் தொடர்ச்சி)

நிழற்கீழே அரசு வீற்றிருந்த முதற் கடவுளே! நினது பொன் மலரையொத்த அறிவாற்றலாகிய திருவடியை ஐந்து புலன் களின் வழிபட்டு நுகருகின்ற அரிய சுவைகளை அறியாத செம் பொருட் செல்வனே! நினது சிறந்த திருவடித் தொண்டுக்கு நல்ல பொருள்கள் கிடையாது போயினும் போகுக, மற்று மொரு தெய்வத்திற்குப் பெரிய பயனைத் தருகின்ற முதன்மை உண்டாயினும் உண்டாகுக, நினது சிற்றடியாரையே அடைந்து அவர்களது குற்றேவலைத் தலைக்கொண்டு இது எமக்குக் கிடைத்தவாறு என்னே என்று செம்மாப்படையும் திறம் உண்டாதற் பொருட்டு வணங்குகிறோம்.

---

[தொடரும்]

# சைவமும் தமிழ் இலக்கியமும்

கல்வெட்டு ஆராய்ச்சிக் கலைஞர்
**திரு. வை. சுந்தரேச வாண்டையார் அவர்கள்**
அண்ணாமலைப்பல்கலைக்கழகம்

ஒரு நாட்டினரின் பழக்க வழக்கங்களையும், அவர்கள் உள்ளத்துக் கிடந்த சிறந்த கொள்கைகளையும், தெள்ளிதிற் புலப்படுத்த வல்லன, அவர்கள் தாய் மொழியானியன்ற சிறந்த இலக்கியங்களேயாம். காலநிலைக்கு ஏற்ப மக்களின் நோக்கங்களும், பழக்க வழக்கங்களும், மாறுபடுவது இயல்பே. அத்தகைய மாறுபாடுகளைப் பிற்காலத்தார் உள்ளபடி உணர்ந்து கொள்வதற்கு உதவியாயிருப்பதும் சிறந்த இலக்கியங்களே. ஒரு காலத்திருந்த மக்களின் உள்ளம், எதன்மாட்டு ஆர்வங் கொண்டிருந்தது என்பதை அக்காலத்திருந்த நல்லிசைப் புலவர்கள் இயற்றிய நூல்களாலேயே, உணரலாம் என்பது இலக்கிய வரலாறு உணர்ந்தவர்களுக்குத்தெள்ளிதிற்றெரியக் கூடியதாம். ஒவ்வொருகாலத்து எழுந்த நூல்கள் பெரும்பாலும் ஒரேவகையான உட்கிடையமைந்திருக்கின்றன. நம் செந்தமிழ் நாட்டில் சங்க காலத்தினும், அதற்கு முற்பட்ட காலத்தினும், இயன்ற சிறந்த இலக்கியங்களின் உட்கிடை, பெரும்பாலும் அகப் பொருட்டிறமும் புறப்பொருட்டிறமுமேயாம். புறப்பொருட்சுவையினும் அகப்பொருட்சுவையே மக்களது உள்ளத்தைக் கவர்ந்தது என்பதற்குச் சங்கத் தொகை நூற்களில் அகப்பொருள் இலக்கியங்கள் மிக்கிருப்பதாலேயே நன்கு உணரலாம்.

நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தோ ரேத்துங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த எட்டுத் தொகை.

என்று எண்ணப்பட்ட பழைய தொகை நூல்கள் எட்டில் புறம், பதிற்றுப்பத்து ஒழிந்த ஏனைய நூல்கள் இவ்வகத்திணைபற்றி அமைந்தனவேயாகும். கடைச்சங்கநாளில், ஒரு காலத்தே பொருளிலக்கண மறிந்த புலவர் கிடையாமற் பாண்டியன் புடைபடக் கவன்றபோது என்னை? எழுத்துஞ் சொல்லும் ஆராய் வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே. பொருளதிகாரம் பெறேமே எனின் இவைபெற்றும் பெற்றிலேம் என அவ்வரசன் கூறினனென்றும் அக்காலத்தே இறையனாரே முன் நின்று அவன் கவற்சி நீங்க அகப்பொருள் இலக்கணம் ஒன்றை அருளிச் செய்ய அதற்குப் புலவரைக் கொண்டு அவன் பொருள் கண்டனனென்றும் கேட்கப்படும் செய்தி அக்காலத்து அகப் பொருளாராய்ச்சியில் மக்களுக்கிருந்த ஊக்க மிகுதியைப் புலப் படுத்தும்.

கடைச்சங்கத்திறுதியிலிருந்த தெய்வப்புலமைத் திருவள்ளு வனார் காலமுதல், அவர் இயற்றிய திருக்குறளைப் பின்பற்றி அறம், பொருள், இன்பங்களை ஒருங்கேயமைத்து (அறத்துப் பாலையும் பொருட்பாலையும் பெருக்கி) நூலியற்றுவதே புலவர் களினியல்பாயிருந்திருக்கலாம். இதனைப் பதினெண் கீழ்க் கணக்கு நூல்களிற் பெரும்பான்மையானவை அத்தகையன வாயிருப்பதே வலியுறுத்தும்.

சங்க காலத்து இறுதி தொடங்கி நாயன்மார்கள், ஆழ் வார்கள், காலம் வரை நாட்டில் பௌத்த சமண சமயக் கொள்கைகள் பரவி மக்கள் உள்ளம் அவற்றிடை யூறிக் கிடந் தமையால் அச் சமயங்களின் கொள்கைகளை உட்கிடையாகக் கொண்ட இலக்கியங்கள் பல தோன்றலாயின.

அதன் பின்னர் முறையே சைவ வைணவ சமயச் சார்பான தேவாரம், திவ்யப்பிரபந்தம் முதலிய புகழ்ப் பாக்களும், தல புராணங்களும் பிறவும் ஒன்றன் பின் ஒன்றாய்த் தோன்றின. இங்ஙனம் காலந்தோறும் மக்கள் கருத்தும் அதற்கேற்பத் தமிழ் இலக்கியங்களின் உட்கிடையும் மாறுதலடையினும் சில சிறந்த கொள்கைகளும் வழக்கங்களும் மாறுதலடையாமல் தொன்று தொட்டு இன்று வரை நிலவுகின்றன. சைவ சமயக்

கொள்கையும் சிவ வழிபாடும் அத்தகையனவே. ஆதியிற் றமிழ்நூல் அகத்தியற்கு மாதொரு பாகர் உணர்த்தினு ரென்றும், பின்னர் குன்றமெறிந்த குமரவேள்பால் அக்குறு முனிவர் தமிழ் உணர்ந்தார் என்றும், மேற்கூறிய திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளும், குன்றமெறிந்த குமரவேளும் தலைச் சங்கத்திருந்து தமிழாராய்ந்தனரென்றும் வரலாறுகள் கேட்கப்படுவதிலிருந்தே தமிழுக்கும், தமிழ்த்தெய்வமாகிய சிவத் துக்கும், சிவனருள் சமயமாகிய சைவத்துக்கும், உள்ள தொடர்பு காலவரம்புக்குட் படாத தெனல் தெரியவருகிறது. சிவனருளால் செந்தமிழுணர்ந்த தென்பொதிய முனிவரின் சீர்சால் மாணவ ராகிய தொல்காப்பியனுர் இயற்றிய இலக்கணந்தான் இக்காலத் துள்ள தமிழ் நூல்களிற் காலத்தால் முந்தியதெனத் தமிழறிஞர் பலருங் கூறுவர். அவ்வரும் பெரும் இலக்கண நூலுள்ளும் குறிப்பாகப் பலசைவ நூற்கருத்துக்கள் அமைந்துள்ளவை அறிஞர்க்குப் புலனுதும். "வினையின் நீங்கி விளங்கிய அறி வின் முனைவன்" என்பது முதலிய தொடர்கள் சைவநூற் சார்பினவே. இப்போது காணப்படும் சங்க இலக்கியங்களிலும் ஆங்காங்கு "ஆலமர்செல்வன்" "முக்கட்செல்வன்" 'பிறவாயாக்கைப் பெரியோன்' முதலியவாய்ச் சிவபெருமான் திருப்பேர்கள் பேசப் படுதலாலும், சங்க நூற்களுக்குப்பின் எழுந்த சமண நூல்களி லும் "போகமார்த்த புண்ணியன்" என்பது போலப் பல பெயர்களால் சிவபெருமான் பேசப்படுதலாலும், சிவனது பெருமையும் அவனது வழிபாடும் நாட்டில் இடையருது மக்களால் போற்றப் பட்டு வந்தது தெரியப்படும். பௌத்த சமணசமய இலக்கியங் களுக்குச் சற்று முன்னே பின்னே சைவசமய ஆசிரியர்களாகிய நால்வர் தோன்றிச் சைவமும் தமிழும் தழைத்தோங்கச் செய்தனர்.

அவர்காலத்துக்குப்பின் எழுந்த தமிழ்த் தலபுராணங்களும் பெரும்பான்மை சைவத்தை விளக்கத் தோன்றியவையே, அருண்மொழித் தேவராம் தெருண்மிகு பெரியாரருளிய திருத் தொண்டர் புராணமோ வெனின் சைவத்துக்கோர் கண்ணும் தமிழுக்கோருயிருமாயுள்ளது. சைவசந்தான ஆசிரியன்மார்கள் அருளிய சித்தாந்த நூல்களனைத்தும் அத்தகையனவே. சிறு

காப்பியங்கள் தோன்றிய காலத்தினும் சைவச் சார்பான சிறு காப்பியங்களே மிகுதியாகத் தோன்றலாயின. அம்முறையில் தமிழும் சைவமும் வளர்த்த பெரியார்கள் பலருள் குமரகுருபர முனிவர், சிவப்பிரகாச முனிவர், மாதவச் சிவஞான முனிவர் மிகச் சிறந்தோராவர். இந்நாள் வரையும் உள்ள சிறந்த தமிழ் இலக்கியங்களெல்லாம் வகுத்துப் பார்ப்பின் சைவச் சார்புடையன மிக்கிருக்குமென்பது தடையின்றி ஏற்றுக் கொள்ளத்தக்க துணிபேயாம்.

தமிழும் சைவமும் நம் நாட்டுக்கு உடலும் உயிரும் போன்று ஒன்றையொன்று இன்றியமையாத வையாயிருக்கின்றன. தண்டமிழ்ப் பயிர் ஓம்பிச் சைவப் பெரும் போகத்தை நுகர்வது தமிழ் மக்கள் தனிக்கடமையாகும். தமிழரே எழுமின்! சைவரே வம்மின்! இறைவரே திருவருள் செய்வீராக.

---

இராகம் : பிலகரி தாளம் : ஆதி

பல்லவி

ஏழைக்கிரங்கும் ஐயா — எந்தன்
இதயக்கவலை தீரும் மெய்யா (ஏழை)

அனுபல்லவி

என்றும் இந்திரன் வானோர் வாழ்த்தும் மருகோனே
எழில்மிகு சிவகாம வல்லி மகிழ் நாதனே (ஏழை)

சரணங்கள்

1) பூமியிற் பிறந்து நற்புண்ணியம் அறியேன்
புல்லர்கள் நேசமன்றி வேறொன்றும் தெரியேன்
பிரபஞ்ச வாழ்வினைச் சதமென்று நம்பினேன்
பிறப்பதும் இறப்பதும் மறந்து நான் வெம்பினேன் (ஏழை)

2) தில்லை அம்பலந்தனில் திருநடமாடிடும்
தேவாதி தேவனைத் தினம் பணிந்தேத்திடும்
தவத்தோர் புகழ்ந்திடும் தில்லைச் சபாபதியே
தன்னிடப் பாகத்தில் கொண்ட தயாநிதியே (ஏழை)

வி. கே. முத்தையா பிள்ளை, பி. ஏ., பி. எல்.,
வண்ணார்பேட்டை, திருநெல்வேலி.

டாக்டர் G. U. போப் அவர்கள் திருவாசக மொழி பெயர்ப்பின் வரலாற்றுக் குறிப்புக்கள்.

# திருவாசகம்

செந்தமிழ்ச் செல்வர், சைவசமயமணி, சிரோன்மணி,
வித்துவான், பாலூர்,
திரு. கண்ணப்ப முதலியார் அவர்கள், M. A., B. O. L.,
பேராசிரியர், தமிழ்த்துறைத் தலைவர், புதுக்கல்லூரி, சென்னை – 14.



[மலர் 12. இதழ் 8-ன் தொடர்ச்சி]

ஒரு வேளை டாக்டர் ஜி. யூ. போப் அவர்கட்கும் கீழ்வரும் இராமலிங்க அடிகளாரது வாக்குகள் துணையாய் நின்று, இறைவன் எடுத்துக் கொடுத்த அடி உலகெலாம் உணர்ந் தோதற் கரியவன் என்பதே ஆகும் என்று நிலைநாட்ட ஒரு சிலர் முன் வரினும் வருவர்: வள்ளலார் வாக்குகள், திருவருள் இன்பத்தை அங்கைக் கனியில் பெற்றபெரியரையும், அத்திருவருளையும் வாச்சிய லட்சியமாகக் கொண்ட பெரிய புராணத்தில் தெய்வத்தற் சிறப்புச் செந்தமிழ்ச் செய்யுட்கண், எல்லாம் வல்ல, இறைவன் திருவருளால் எடுத்துக் கொடுக்கப்பட்ட "உலகெலாம் உணர்ந்து ஓதற் கரியவன்" என்னும் மெய்ம் மொழியினது பொருள் விளக்கம் ஆதலின், மெய்ம் மொழிப் பொருள் விளக்கம் என்றுயிற்று என்க என்பதை திருவருட்பா ஆருவது திருமுறை பக்கம். 141.ல்காண்க. ஆனல் வள்ளலார் உள்ளத்தில்ஊடுருவி இருந்தது "உலகெலாம்" என்ற தொடரே என்பதுஅவரது வாக்குகளாகிய உலகெலாம் என்னும் மெய்ம் மொழிப் பொருள் விளக்கம் என்றும், "உலகெலாம்" என்னும் மெய்ப்பொருள் விளக்கம் என்பது எங்ஙனம் எனில்! என்னும் தலைப்பும் தொடக்கமும் எழுதிக் காட்டுதல் வாயிலாக அறியலாம். மேலும் "உலகெலாம் என்பது பலநோக்குடைப் பெருமொழி ஆதலின் எந்நோக்கம் கருதி

மொழிந்தனர் இறைவர் அந்நோக்கம் அவர் அறிந்தே முடித்தல் வேண்டும்" என்றும் எழுதியுள்ளார். இத்துடன் இன்றி உலகெலாம் என்னும் தொடர் 2306 உலகங்களைக் குறிப்பதாகவும் எழுதி உலகெலாம் என்ற தொடரினையே விளக்கமுற விளக்கியுள்ளனர் என்க.

அநபாயன் சேக்கிழாரது இளவலாம் பாலருவாயரை அழைத்து "இவர் அமைச்சர்; இவர் பட்டமும் மன்றல் மாலை புனை தொண்டைமான்" என வகுத்தபின் தமது மண்டலம் அன்று, வற்பம் வர, வந்தடைந்தவரை ஆற்றல் செய்து 'தொண்டை மண்டலம் நின்று காத்த பெருமான்' எனத் தமது பெயரை எங்ஙனும் நிறுத்தினுர் என்று உமாபதி சிவம் கூறியுள்ளார். சேக்கிழார்க்குத் தொண்டர்சீர் பரவுவார் என்ற பட்டம் இருக்கின்றதே அன்றித், 'தொண்டை மண்டலம் நின்று காத்த பெருமான்' என்றோ'மன்றல் மாலைபுனை தொண்டைமான்'என்றோ பட்டம் இருப்பதாக இதுவரையில் இல்லை. மேலும் சேக்கிழார் தில்லையிலேயே கூத்தப் பெருமானையும் அவனது தொண்டர்களின் திருவடிகளையும் போற்றி வாழ்ந்து இறைஅடி அடைந்தனர் என்றே உமாபதி சிவம், பாடியுள்ளார். இதனை

"தொண்டர்சீர் பரவு சேக்கிழார் குரிசில் தூயதில்லை நகர்தன்னிலே
பண்டு மூவர் பதிகத்து வந்த அறுபத்து மூவர் கதை உணர்ந்து
அண்டவாணர் அடியார்கள் தம்முடன் அருந் தவந்தனில் இருந்து பின்
இண்டை வைத்த சடை அம்பலத்தவர் எடுத்த பாதநீழல் எய்தினுர்."

என்று பாடுவதிலிருந்து உணரலாம்.

இஃது இவ்வாறு இருக்கப் போப் அவர்கள் சேக்கிழார்க்கு அரசன் தொண்டைநாடு ஈந்து தொண்டைமான் ஆக்கினுன் என்றும், சேக்கிழார் தமது இளவலான பாலருவாயரது துணை கொண்டு தொண்டை நாட்டைஆண்டு பின் இறைவன் திருமுன் சென்ருர் என்ற பொருள் படும்படி "The king then assigned to the poet the Thondi Land as a kingdom, which, with his brother, he governed for some time, and then returning to the presence of the God in due time obtained his final release" என எழுதியுள்ளனர். See page. XCV.

ஆக இதுகாறும் காட்டிவந்த வரலாறுகளில் போப்பையர் அவர்கள் எங்கெங்கு மாறுபட்டனர்; எவ்வெவற்றை உணர்த்தாது விடுத்தனர் என்பனவற்றை எடுத்துக் காட்டினேம். டாக்டர். ஜி. யூ. போப் அவர்கள் மேற்கு நாட்டு அறிஞராக இருந்தும் சைவப் பெருமக்களின் வரலாறுகளைப் பெரும்பாலும் ஒத்து வரும் நிலையில் எழுதி இருப்பதை நாம் பாராட்டாமல் இருக்க முடியாது. அவர் எழுதியுள்ள வரலாறுகளைப் படிக்கும்போது, ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் காட்டியுள்ள இடங்கள் நமது மூலநூலில் உள்ள பாடல்களை அப்படியே தழுவி மொழி பெயர்த்துள்ளனர். எடுத்துக் காட்டிற்காக இரண்டிடங்களை மட்டும் எழுதி இக்கட்டுரையினை முடிப்போமாக:

காரைக்கால் அம்மையார் இறைவனை நோக்கிக் கேட்ட வரங்கள் இன்னவை என்பதைச் சேக்கிழார் பெருமானுர் இறவாத இன்ப அன்பு வேண்டிப் பின் வேண்டுகின்ருர்; பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னை, மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும்நான் மகிழ்ந்து பாடி, அறவா நீ ஆடும் போதுன் அடியின்கீழ் இருக்க என்ருர், என்று பாடியுள்ளனர். இதனை அப்படியே,

I would fain be born on earth no more, but if I must be so born, grant me at least that I may never, in any form, at any time, forget Thee, my God; and when thou dost perform thy sacred mystic dance; beneath thy feet in rapture may I stand and sing thy praise' பக். 113 என்று மொழி பெயர்த்துள்ளனர்.

திண்ணனுர் தம் திருவடியால் திருக்காளத்தி அப்பரது திருமுடிமலர்களைத் தள்ளுதல் திருமுருகனது சேயடி தன் மீது படுவதினும் இன்பம் தருகின்றது என்றும், வாய்நீர், கங்கை நீரினும் புனிதமானது என்றும் பொருள்படும் நிலையில் தொண்டர்சீர் பரவுவார் 'செருப்படி அவ்விளம் பருவச்சேயடியில் சிறப்புடைத்தாம்' என்றும் உயர் கங்கை முதல் தீர்த்தப்பொரு புனலின் எனக்கவன் தன் வாய் உமிழும்புனல் புனிதம் என்றும் இறைவன் சிவகோசரியார் கனவில் கூறியதாகப் பாடியுள்ளனர். அவற்றை அப்படியே போப் அவர்கள் The touch of his

leather slipper is pleasant to me as that of the tender hand of my son Skandha. The water with which he besprinkles me from his mouth is holy to me as the water of the Ganges' பக்க. 144 மொழி பெயர்த்துக் காட்டி யுள்ளார்.

இங்ஙனம் ஊன்றி நம் சமய வரலாற்றை உணர்ந் திருந்தும், சிற்சில இடங்களில் மாறுபட எழுதி இருப்பதேன் என்ற ஆசங்கை சிலர் பால் எழலாம். இதற்குரிய காரணத்தை நாம் அறிந்து அவர் பால் குற்றம் உளதாகக் கூறுதற்கு முன்பே அவர், 'If in this work any one word of mine should give pain to any of my valued Tamil friends, I ask forgiveness in advance. Preface XI என்று தம் பணிவைப்பகர்ந்துள்ளார். மொழிகளை நாம் ஆழ நினைத்திடில் வள்ளுவனர் வாய்மொழியாகிய "பணியும் ஆம் என்றும் பெருமை சிறுமை அணியுமாம் தன்னை வியந்து" என்னும் குறள் நம் நினைவுக்கு வந்து போப் அவர்களின் பண்பினைப் போற்ற வேண்டியவராய் உள்ளோம்.

குறிப்பு:- இக்கட்டுரையில் கண்ட ஆங்கிலப் பகுதிகளின் பக்க எண் கள் சென்னைப்பல்கலைக்கழக வெளியிடாகிய Tiruvachagam - English- Translation பதிப்பின்படி குறிப்பிடப்பட்டவை.

---

# இலக்கியமும் ஆராய்ச்சியும்

"ஞானசம்பந்தம்" 1961 - ஆனி, ஆடி மாத இதழ்கள்.

வித்துவான்
திரு. வி. மு. சுப்பிரமணிய அய்யர் அவர்கள், M. A.



" அறிதோ றறியாமை கண்டற்ருல் " (குறள் 1110) என்று திருவள்ளுவரும், "நுணங்கு கேள்வி ஆயப்புகுங்கால் அறிவொக்கும் எவர்க்கும் அன்னுன்" (கம்ப. பால. அரசியற். 4) என்று கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பரும் கூறியுள்ளமை பிற துறைகளுக்கேயன்றி இலக்கியத் துறைக்குப் பொருந்துவதா கும். ஆராய்ச்சிக்கு முடிவு இல்லையாதலின் அறிவும் அத்தகை யதே. சிறப்பாகத் தமிழிலக்கியத்தில் தமிழ்நாட்டில் நூல்கள் எழுதப்பட்டு வந்த பனையோலைகள் இராமபாணம் முதலிய பூச்சி களால் துளைக்கப்பட்ட காரணத்தால் பல கேடுகளுக்கும், பிறழ்ச்சிகளுக்கும் உள்ளாயின. சிலர் அறிவின் குறையாலும் பிழைபட்ட உரைகளும் பதப்பிரிவுகளும் பிறவும் உண்டாயின. னகர ளகர மயக்கங்களும், தகர ககர மயக்கங்களும், லகர வகர மயக்கங்களும் உண்டாகிப் பல பொருள் மயக்கங்களைத் தந்தன.

சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகத்தின் 256 ஆம் செய்யுளின் உரையில் 'யானைநாதத்திற் ரேன்றுதலின் அதற்கு வணங்குதலியல்பு' என்று ஒரு செய்தி காணப்படு கின்றது. அதைப் பதிப்பித்த டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் கூறிய செய்தி ஒன்று ககர தகர மயக்கத்தை நன்கு விளக்கும். எல்லாச் சுவடிகளிலும் 'நாகத்தில்' என்றே காணப் பட்டது. நாகம் என்பதற்கு மலை என்று பொருள் கொண்டு கிரிசரம் என்ற மூவகை யானைகளில் ஒன்ருகப் பொருள் கொள்ள லாமாயினும், பின்னே வரும் இசைக்கு வணங்குதல் இயல்பு

என்பதோடு பொருந்துமாறு இல்லை. பின்பு ஒரு பழைய ஏட்டுச் சுவடியைப் பார்த்தபோது 'நாதத்தில்' என்று காணப் பட்டது. ஐயரவர்களுக்கு உண்டான மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. இச் செய்தி அவர்களே கூறியது. நாமகளிலம்பகம் 34 ஆம் செய்யுளில் 'கருங்கடல் வளந்தரக்கரையும் பண்டியும்' என்று மூலபாடமும் அதற்கு ஏற்ப உரையும் காணப்படுகின்றன. 'நகர்க்கரையும் பாடமாயின், கரைதல் திசைச்சொல்லாய்க் கொண்டு போம் என்னும் பொருள் பயக்கும்' என்று பிறிதோர் உரையும் காணப்படுகின்றது. இப்பாடபேதம் ஒற்றுக்களுக்குப் புள்ளியில்லாமலிருந்ததாலும் ககர தகர மயக்கத்தாலும் நிகழ்ந்ததே என்று ஏட்டுச்சுவடிகளைப் படித்துப் பழகிய அறிஞர்களுக்கு எளிதில் விளங்கும்.

னகர ளகர பேதமும் இன்றும் அச்செழுத்து வந்த பின்பும் பெரிதும் மயக்கம் தருவது. சங்க நூல்களில் தலை மகன் தலைமகள் என்று வரும் இடங்களில் விழிப்புடனிருந்து பார்த்தா லன்றி விபரீதமான பிழைநேரும். உன், உள் என்ற சொற் களும் இந்த முறையில் உண்டாகியிருக்கலாம்.

நம் முன்னோர், முன்னோர் மொழிபொருளைப் பொன்னேபோற் போற்றினர். அதற்கு எடுத்துக்காட்டாக இரண்டு ஒன்று கூறு வோம். பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணத் தில், திருமணப்படலத்தின் 30 ஆம் செய்யுளின் 1-2 அடிகள் 'வென்றிக் கணத்தை விடுத்தான் கனல்மீது பெய்த குன்றிக் கணம்போற் சுழல் கண்ணழல் கொப்பு ளிப்ப' என்று காணப் படுகின்றன. இது பாடமாயின் கனலில் பெய்த குன்றிக் கணம் கருகிச் சாம்பராதலேயன்றிச் சுழலும் அழல் கொப்பளித் தலும் இல்லை. இவ்விதம் பிழை உண்டாகிய காரணம் ஏட்டுச் சுவடியைப் படிக்கத் தெரியாமையே. இச்செய்யுள் காப்பியக் கலித்துறை, நேரசையாயின் ஓரடிக்கு 15 எழுத்தும் நிரையாயின் 17 எழுத்தும் அமையும். முதலடியில் விடுத்தான் என்று ஒற்றிற்று முற்றுகப்படித்து விட்டமையாலும் கன என்பது பொருள் தராமல் வறிதே நின்றமையாலும் னகர ஒற்று ஒன்றைச் சேர்த்து 'கனல் மீது' என்று பாடம் வழங்கப் பட்டது இது ஒரு பழஞ்செய்யுளின் கருத்து. புறநானூறு 300 ஆம்

பாட்டில் நெருநல் எல்லைநீ எறிந்தோன் தம்பி, அகல்பெய் குன்றியிற் சுழலுங் கண்ணன் என்று காணப்படும் அரிய உவமை ஈண்டு எடுத்தாளப்பட்டது. 'விடுத்தான் அகன்மீது' என்று படித்தால் பொருள் அமைதி சிறக்கும்; புறநானூற்றில் இச்செய்யுளின் அடிக்குறிப்பில், ஒப்புமைப் பகுதியாகத் திருவிளையாடற் புராணச் செய்யுளடிகள் தரப்பட்டுள்ளன.

திருப்புகழில் 'ஆசைகூர் பத்தனேறும்' என்ற செய்யுளில் 'மாக்குதா புஷ்பமாலை' என்றே பதிப்பிக்கப்பட்டுள்ளது. இதன் திருத்தமானபாடம் 'மாத்ருகா புஷ்பமாலை' என்பது என்று சைவசித்தாந்த சமாஜப் பதிப்பின் முகவுரையில் தக்க விவரங்களோடு கூறப்பட்டுள்ளது. இவைகளெல்லாம் ஏடுகளில் ககர தகர மயக்கத்தால் நேர்ந்தனவே.

இன்றும் ஏடுகளில் ல, வ, ய, ப, ட, என்பவை பெரிதும் மயக்கத்துக்கு இடமாவன. திருவிளையாடலில் உக்கிரகுமார பாண்டியன் திருவவதாரப்படலத்தில் பல அரசர் வந்து அவர் அவதரித்ததைப் பாராட்டியதாகக் கூறும்பகுதியில் தருமமா தவத்தின் பேறே (21) என்னும் செய்யுளில் ஈற்றடி 'கனிதரு கருணை போலிக் காதலன் றேற்றமென்பார்' என்று அச்சுப் பிரதிகளில் காணப்படுகின்றது. அச்செய்யுளில் பலபடப்புனை வணி அமைந்துள்ளது. அதன் பொருளமைதியை ஊன்றி நோக்கின் மற்ற அடிகளில் உள்ளதைப்போல இவ்வடியிலும் 'கனிதரு கருணையோவிக் காதலன்' என்றிருக்கவேண்டும். சீவக சிந்தாமணியில் காந்தருவத்தையாரிலம்பகத்தில், 'கொன்னெழுகு வேலியவதத்தன்' (2) என்று காணப்படுகின்றது. இப்பகுதிக்கு நேரான ஸ்ரீ புராணப்பகுதியில் வ்ருஷபதத்த ஸ்ரேஷ்டிக்கும் பத்மாவதிக்கும் புத்திரன் ஜினதத்தன் என்பான் என்பது உள்ளது. இதனை நோக்கும் பொழுது வேலிடபவதத்தன் என்பது பிழையற்ற பாடமாதல் விளங்கும்.

யாப்பருங்கலம் எழுத்தோத்தில் ஆய்தமும் யவ்வு மவ்வொடு வரினே, ஐயெனெழுத்தொடு மெய்பெறத் தோன்றும் என்ற அவிநயச் சூத்திரம் காணப்படுகின்றது. இதையொட்டியே இலக்கிய வழக்காறும் உள்ளது. திருக்குறளில் 'செய்க

பொருளைச் செறுநர் செருக்கறுக்கும், எஃகதனிற் கூரியதில்' (759) ஆய்தத்துக்கு யகரம் எதுகையில் வந்துள்ளது. சிந்தா மணியிலும், அஃதே யடிகளு முளரோ வென்றுற்கருளுமா றிஃதா விருந்தவாறென்ருர்க் கென்னைப்பெறவல்லார் எய்தா இடருளவோ எங்கெங்கென்ற திசைநோக்கி வெய்தா வடி தொழுது வேந்தன் கோயிற் கெழுந்தானே" (1884)சூளா மணியில் "அஃதே யஃதேயாங்கார வேகனுங்கோ ரயில் வாளால், வெய்தாங்குற்று விடினுனன்றே நன்றே மறுமாற்ற மைதோய் மலையும் மண்ணகமு நமதாச் செய்வன் செய்யே னேற்,செய்தாரமரருலகாள் வானிரண்டிலொன்று திண்ணமதே" (அரசியற் சருக்கம் 206) என்று இதேவகை எதுகை காணப்படு கின்றது. இதனைப்போலவே திருவாசகம் திருச்சதகத்திலும் "எய்தலாவதென்று நின்னை" என்று தொடங்கும் செய்யுளிலும் ஈற்றடி "இஃதலாது நின்கணென்றும் வண்ணமில்லை ஈசனே" என்றே யிருக்கவேண்டுமெனத் தோன்றுகின்றது. இந்த ஊகத் திற்கு இலக்கிய மரபு துணைபுரிகின்றது. நன்னூல் மயிலைநாத ருரையில் "அம்முனிகரம்" என்ற சூத்திரத்தின் அடிக்குறிப் பில் 'அம்முனிகர மாய்தமென்றிவை எய்தின்' என மூலமும், அகரமுன் இகரமும் ஆய்தமும்வரின் என உரையும், 'அஇவனம் ஐவனம்; கஃசு கைசு' என உதாரணமும் மிதிலைப்பட்டி ஸ்ரீ அழகியசிற்றம்பலக்கவிராயரவர்கள் வீட்டுப் பிரதியிலும் வேறு மூன்று பழைய பிரதிகளிலும் காணப்பட்டன என்ற அடிக் குறிப்பும் ஆழ்ந்து சிந்தித்தற்குரியது. இவற்றையெல்லாம் கருவியாகக்கொண்டு நோக்கின் திருவாய்மொழி 2-ஆம்பத்து 9-ஆம் திருமொழி 2-ஆம் செய்யுளில் முதலடி 'ஈதே யான் உன்னைக் கொள்வது எஞ்ஞான்றும் என்' என்று உள்ளது. ஏனைய அடிகள் "மைதோய் சோதி மணிவண்ண எந்தாய், எய்தா நின்கழல் யான் எய்த ஞானக்கைதா காலக்கழிவு செய்யேலே" என்று உள்ளன. மேலே கூறியுள்ள இலக்கியச் சான்றுகளை நோக்கும்போது முதலடி "இஃதே" என்று இருத்தல் வேண்டும். ஒவ்வொரு திருமொழியும் அந்தாதித் தொடையாக அமைந்திருத்தலால் இப்பாசுரத்தின் முன்பாசுரத்தின் ஈற்றிலும் "இஃதே" என்றே இருக்கவேண்டுமெனத் தோற்றுகின்றது.

பொருளை வரையறை செய்யாமையாலும் ஆன்றோர் மரபை நன்கு உணராமையாலும், பதங்களைப் பொருளுணர்ந்து பிரித்துப் பதிப்பிக்காமையாலும் நேரும் பிழைகள் பல. முற்காலத்தில் "படித்தவன் பாட்டைக் கெடுத்தான், எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்" என்று ஒரு பழமொழி உண்டு. அச்சு யந்திரம் வந்தபின்பு அதனோடு 'அச்சிட்டவன் அவ்வளவையும் கெடுத்தான்' என்பதையும் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

திருஞான சம்பந்தப்பெருமான் தேவாரத்தில் முதல் திருமுறையில் திருவதிகைவீரட்டானப் பதிகத்தின் 10-ஆம் திருப்பாட்டு ஜைன பௌத்தரைக் கூறுவது. அதன் முதலடி 'அரையோடு அலர்பிண்டி மருவிக் குண்டிகை' என்பது. இதனுள் அரை என்பதற்கு வெற்றரை என்று சிலர் அடிக்குறிப்பில் பொருள் எழுதியுள்ளனர். அது பொருந்துமா என்பது ஆராய்தற்குரியது. இரண்டாம் அடியில் 'உடைவிட்டுழல்வார்கள்' என வந்துள்ளது. ஆதலால் முதலடியில் அரையென்பது வெற்றரையென்று பொருள்தருதற்கு இடமில்லை. பின்னை அதன் பொருள் யாது? பிண்டி அசோகு என்பதும் அது அருகனுக்கு உரியதென்பதும் தமிழறிஞர் யாரும் அறிந்ததொன்றே. அரை என்பது பௌத்தருக்குரிய அரசமரத்தைக் குறிப்பதாகவேண்டும். தொல்காப்பியத்துள் உயிர்மயங்கியலுள் 'பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்' என்பதனுள் கூறப்பட்ட அரை என்பதன் பொருளும் இதனால் துணிய ஏதுவாக உள்ளது. அதேதிருமுறையில் திருமுதுகுன்றத் தேவாரத்தின் இரண்டாம் திருப்பாட்டின் முதல் அடியில் 'தழையார் வடவியவீதனில்' எனக் காணப்படுகின்றது. வியவீ என்பதற்குப் பொருள் விளங்கவில்லை. இவ்வடி தக்ஷிணாமூர்த்தி அவசரத்தைக் குறிக்கின்றது. அங்ஙனமாயின் வியவீ என்பது விடவி என்பதாக வேண்டும். விடவீ என்பது விடவி என்பதன் நீட்டல் விகாரம். சந்தத்திற்கு ஏற்பவந்தது. விடபம் - கிளை. அதனை உடையது விடபி; அது தமிழில் விடவி என வந்தது. அப்பொழுது வடவிடவீ யென்பது ஆலமரத்தைக் குறிப்பதாகும்.

திருநாவுக்கரசர் திருமுறையிலும் சாய்க்காட்டுத் தலத்தைச் சேர்ந்த தேவாரத்தில் ஈற்றுத் திருப்பாட்டில் "புயங்களைஞ்

ஞான்கும் பத்தும் மாயகொண் டரக்கனேடிச் சிவன்திரு மலை யைப் பேர்க்க" என்றுள்ளது. இது இராவணன் செயலைக் கூறும் பாசுரம். புயங்கள் என்று பாடமாயின் இராவணனுக்குப் பத்துத் தலைகள் இருந்தனவாகக் கேள்விப்படுகின்றேமேயன்றி முப்பது இருந்ததாகக் கேள்விப்படவில்லை. இதனுடைய முதலடி யைப் பிழைபட ஒதிவந்தமையே இந்த மயக்கத்துக்குக் காரணம் ஆயிற்று. புயங்கம் ஐஞ்ஞான்கும் பத்தும் என்பதே பிழை நீக்கிய பாடம்; அப்போது நிரனிறையாகப் புயம் இருபதும், தலை பத்தும் என்று எளிதில் பொருள்பட்டு மயக்கமும் நீங்கு கின்றது.

4-ஆம் திருமுறையைச் சேர்ந்த திருவாரூர்த் திருநேரிசை 10-ஆம் திருப்பாட்டின் முதலடி 'ஆயிரந் திங்கள் மொய்த்த அலைகடலமுதம் வாங்கி' என்று அச்சிட்ட பிரதிகளில் எல்லாம் காணப்படுகின்றது. கடலில் நதிகள் மொய்ப்பதாகக் கூறப் படுதல் மரபேயன்றித் திங்கள் அதுவும் ஆயிரம் திங்கள் மொய்ப் பதாகக் கூறப்படுதல் இல்லை. இங்கும் 'ஆயிரந்திங்கள்' என்ற இடத்து நகர ஒற்றுகப் படித்தமையால் ஒரே எழுத்துத் தேவையாயிற்று. ஙகர ஒற்றைச் சேர்க்கவேண்டிவந்தது. இதனைப் பிழைநீக்கி வாசித்தால் 'ஆயிர நதிகள் மொய்த்த' என்றுகும்.

சுந்தரர் தேவாரத்தில் புறம்பயத் தேவாரத்தில் 7-ஆம் திருப்பாட்டில் ஈற்றடி, 'புன்னைக் கன்கழிக்கரும்பு புறம்பயம் தொழப் போதுமே' என்று உள்ளது; புறம்பயம் நெய்தல் நிலத்தி லுள்ளது அன்று; மருதநிலத்திலுள்ளது; அதற்கு, 'புன்னைக் கன்னிகைக் கரும்பு புறம்பயம் தொழப் போதுமே' என்று பாட பேதமும் உள்ளது; இதுவே சிறந்ததும் உண்மையான பாடமும் ஆதல்வேண்டும்; பிற திருமுறைகளிலும் புன்னையரும்புக்கு அக்கை உவமையாகக் கூறிய இடங்கள் உள்ளன; திருஞான சம்பந்தர் தேவாரத்தில், 'புன்னைய மலர்ப்பொழில்க ளக்கிெனாளி காட்ட' எனவும், பதினேராம் திருமுறையில் கபிலதேவநாயனர் இயற்றிய சிவபெருமான் திருவிரட்டைமணிமாலையின் 30-ஆம் செய்யுளில் 'புன்னைமுன்னம் அக்கு வரும் கழிக்கானல் ஐயாறரை' எனவும் வரும் பகுதிகள் காண்க,

சங்கநூல்களில் ஒரு தலைவியைச் சிறப்பிக்கும்போது, இன்ன தலைவனுடைய இன்னநகர் போன்ற சிறப்புடையவள் என்று கூறுவது மரபு. இதனை. 'தேர்வண் கோமான் தேனூர் அன்ன இவள்', 'வேல்போர்ச் சோழர் ஆமூர் அன்ன இவள்' (ஐங்குறுநூறு. 55, 56) என்ற அடிகளால் உணரலாம். இந்த ஆன்றோர் மரபை உணராமல் படிப்பவர்க்குப் பொருள் விளங்க, வேண்டுமே என்ற எண்ணத்தோடு தவருகப் பதம் பிரித்துப் பதிப்பித்த பதிப்புக்களும் உள்ளன. பதினோராம் திருமுறையில் சேரமான்பெருமாள் நாயனுர் இயற்றிய திருவாரூர் மும்மணிக் கோவை உள்ளது. அந்நூலில் பல செய்யுட்கள் அகப் பொருட்டுறை அமைந்துள்ளன. "துன்னரும் நஞ்சு, ஆரும் மிடற்றண்ணல் ஆரூர் அனைய அணங்கினுக்கே" என்பது 6 ஆம் பாட்டின் ஈற்றடி. அது 'ஆரும் மிடற்று அண்ணல் ஆரூரன் ஐய அணங்கினுக்கே' என்று பிரிக்கப்பட்டுப் பொருள் மயக்கத்திற்கு இடம் ஆகின்றது.

அதே திருமுறையில், சிவபெருமான் திருவிரட்டை மணி மாலையில் 28 ஆம் திருப்பாட்டின் முதலடி 'கொடிறு முரித் தனன் கூருளனல்லன் குருகினம் சென்று' என்று முதற்பதிப் பில் காணப்படுகின்றது. பின்பு பதித்தவர் பதம்பிரித்து மேலும் ஒரு பிழையைக் கூட்டினர்; 'கொடிறு முரித்தனன் கூருளன் நல்லன்' என்பது அது. இங்கே கூறிய கருத்து பின்வரும் பத்துப்பாட்டில் பெரும்பாணுற்றுப்படை யடிகளை ஊன்றி நோக்கி ஒப்பிட்டால் எளிதில் விளங்கும்; "மிதியுலைக் கொல்லன் முறிகொடிற்றன்ன கவைத்தாளலவன்" என்பன அவ்வடிகள் (207–8). இதைக்கொண்டு செப்பஞ் செய்யின், இவ்வடி 'கொடிறு முரித்தன்ன கூன்ருளலவன்' என்றிருக்க வேண்டும். யான் முன்னே கூறியபடி ஒற்றுக்களுக்குப் புள்ளி யிடப்படாமையும், லகர வகர வேறுபாடின்மையும் இப்பிழை பட்ட பாடத்துக்குக் காரணமாயின.

பொருள் வரையறை செய்துகொள்ளாமல் தவருகப்பிரித்துப் பொருள்மயக்கம் உண்டாக்கியதற்கு இரண்டோர் உதாரணங் கள் காட்டி இக்கட்டுரையை முடிப்பன்.

சுந்தரர் தேவாரம், அரிசிற்கரைப்புத்தூர்த் தேவாரம் 7ஆம் பாட்டு தக்கன் யாகம் அழித்த செய்தி கூறுவது. தேவர் பலருடைய அங்கங்களைச் சிதைத்ததைக் கூறுவது. 'பழிக்கும் பெருந்தக்கன் எச்சம் அழியப் பகலோன் முதலாப் பலதேவரை யும், தெழித்திட்டு அவர்அங்கம் சிதைத்தருளும் செய்கை என்னைகொல்லோ' என்று இருக்கவேண்டியது, 'தெழித்திட்ட அரங்கம்' என்று பிரிக்கப்பட்டுள்ளது.

திருக்கச்சிமேற்றளிப் பதிகம் 8 ஆம் திருப்பாட்டிலும், திருக்காளத்திப்பதிகம் 8 ஆம் பாடலிலும் 'கூறேன் நாவதனால்' என்று பிரிக்கப்படவேண்டியது 'கூறேன் ஆவதனால்' என்று பிரிக்கப்பட்டுள்ளது. இன்னும் பதினோராம் திருமுறையில் சிவபெருமான் திருவிரட்டைமணிமாலை 8 ஆம் திருப்பாட்டில் 'திரியும் புரம்மூன் றறப்பாய் எரியுற வான்வரை வில்வளைத்தாய் இரவாய், மறப்பாவரியர நாணிடைக் கோத்தகை வானவனே' என்று காணப்படுகின்றது. 'வில்வளைத்து ஆயிரவாய் மறப்பா வலியர' என்றிருக்கவேண்டும். ஆதிசேடனுக்கு ஆயிரம் தலை என்பது பிரசித்தமான செய்தி.

இதுகாறும் கூறியவற்றால் ஆராய்ச்சி, மொழியில் ஆழ்ந்த பயிற்சியும், முன்னோர் மரபும், ஏட்டுச்சுவடிகளைப் படிக்கும் சிறந்த பழக்கமும் உடையவர்கள் மேற்கொள்ளத் தக்கது என்பதும், அதற்கு முடிவில்லை என்பதும் நூல்களை அச்சிடுதல் அவசரமின்றி நிதானமாகச் செய்யத்தக்க பணி என்பதும் உணரலாகும். பிழை மலிய அச்சிட்டால் பிற்காலத்தில் பிழை களைத் திருத்துதற்குக் கருவிகளான ஏட்டுச்சுவடிகளும் அழிந்து போகக்கூடும். இதனால் பதிப்பாசிரியர்களைக் குறைசொன்ன தாகக் கருதாமல் தாம் மேற்கொள்ளும் பணி மேன்மையும் பெரும்பொறுப்பும் வாய்ந்தது என்பதை உணர்ந்து ஆற்ற வேண்டுமென்பதே என் வேண்டுகோளாகும்.

---

# விவேகமும் வியப்பும்

வண்ணை, திரு. க. சிவலிங்கம் அவர்கள்

(மலர் 12, இதழ் 8-ன் தொடர்ச்சி)

மேலும் காற்ருேடு உரையாடுங் கருத்தறிய நெய்தல் நிலத்திற்கு வாருங்கள்: இதோ பாருங்கள்!

ஒருமாது தன்னிடம் மாருத அன்பு கொண்ட தலைவன் பிரிவைப் பொறுக்க முடியாதவளானுள். அதனுல் அவன் வருகைமீது நாட்டங் கொண்டு பன்னுள் எதிர்பார்த்தாள். அவள் எண்ணத்திலே ஏமாற்றம் ஏற்படவே, ஊண் உறக்கம் அத்தனையும் ஒழித்தாள். அவள் உள்ளத்திலே படிந்த அவனு டைய உருவமைப்பு அடிக்கடி எழுந்து ஆற்ருெணுத் துயரத்தி லாழ்த்தியது. என் செய்வாள் பேதை? அவன் இருக்குமிடந் தெரிந்தாலும்; தன்தோழியை அனுப்பித் தந்துயரைக் களைவாள். அப்படி ஏதும் அவளுக்குத் தெரியவில்லை. இறுதியாக இயற்கை அன்னையின் துணையை நாடினுள். தங்கண்ணுக்குத் தெரிந்த கடல், முயல், திங்கள் இவைகளிடமெல்லாம் தந்தலை வனைக்கண்டு பிடிக்குமாறு கட்டளையிட்டாள். அவள் வாசகத் தைக் கேட்டு அவை வாளாவிருந்தன. அதுதருணம் தன்னை மருவ வந்த காற்றை நோக்கி, அதனிடம் தன்கருத்தைக் கூறிடும் கனிவைக் கவனியுங்கள்.

"காற்றே! என் உள்ளத்திலே கனலாகப் பற்றும் காம நோயை யுண்டாக்கிவிட்டு, என்னைஇந்நிலையில் விட்டுச்சென்ற, அத்தலைவனை நான் காண விழைகின்றேன். விண்ணிலும் மண்ணிலும், பலகதிரொளிகளைப் பரப்பும் கதிரவனின் ஒளி யுள்ள இடமெல்லாம் நீ சென்று, எனது இயற்கையான அழ கிலே இன்பத்தைத் துய்த்த பிறகு, என்னை வெறுத்து ஒளித்துக் கொண்டிருக்கும் என் தலைவனைத் தேடிக் கொண்டுவந்து

காட்டுவாயாக! அவ்வாறு நீ காட்டா விட்டால் என் கண்ணீராகிய தீயைத் தெளித்து, இம்மண்ணுலகமத்தனையும் ஒருங்கே சுட்டுவிடுவேன்!"

என்ன விந்தை! கனிமொழி பேசவேண்டிய அவள், இப்படிக் கனல் கக்கும் வார்த்தைகளை வாரிவீசி விட்டாள் அல்லளோ! இஃது அவள் குற்றமில்லை. அவளைப் பற்றியிருக்கும் அன்புதான் இந்நிலைக்குக் கொண்டு வந்து விட்டது. என்றாலும் கண்ணீர்த்தீயைத் தெளித்து இம்மண்ணுலகை மாய்ப்பேன் என்றது, அன்பிலிருந்து தோன்றும் ஆற்றலேயாம். அவ்வன்பின் துடிப்புத்தான் என்னே? அவளை வலிமை மிக்கவளாகவன்றோ காட்டிக் கொள்ளச் செய்துவிட்டது. இந்நிகழ்ச்சியை,

"வளியே! எதிர்போம் பலகதிர் ஞாயிற்று
ஒளியுள் வழியெல்லாம் சென்று முனிபுஎம்மை
*உண்மை நலனுண்டு ஒளித்தானைக் காட்டீமோ!
காட்டாயேல் மண்ணக மெல்லாம் ஒருங்கு சுடுவேன் என்
கண்ணீர் அழல் தெளித்து.... .... ...."

(கலித்தொகை செய்தற்கலி 144, 40, 44);

என்னுஞ் செய்யுளில் ஓர்க.

மேலும் வாரோடு உரையாடும் வகையைத் தெரியத் திருமலையூருக்குச் செல்வோமாக!

இந்நாட்டைத் திருமலைராயன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். இவன் அதிமதுர கவிராயர் முதல் அறுபத்து நான்கு தண்டிகைப் புலவர்களையும், தன் அவைப் புலவர்களாகக் கொண்டு தந்நாட்டைச் சீரோடும் சிறப்போடும் ஆட்சி புரிந்து வந்தான்.

இவன் அவையிலுள்ள தலைமைப்புலவரான அதிமதுரகவிராயர் தன்னைவிடச் சிறந்த புலவன் இத்தரணியில் எவருமில்லை

* உன்வழியெல்லாம் - உள்ள இடமெல்லாம்: உண்மை நலம் - இயற்கை அழகை; உண்டு - நுகர்ந்து; முனிபு - வெறுத்து; காட்டீமோ - காட்டுவாயாக: காட்டாயேல் - காட்டாவிட்டால்.

யென இருமாந்தார். இச்செய்தியைக் கேள்வியுற்ற காள மேகப்புலவர்; அத்திருமலையூருக்கு வந்தார்.

ஒருநாள் அதிமதுர கவிராயர் அந்நாட்டைச் சுற்றிப்பவனி வந்தார். அத்தருணம் காளமேகப் புலவர் இடையே புகுந்து குறுக்கே சென்ருர். உடனே அதிமதுர கவிராயர் வெகுண்டு, காளமேகப்புலவரைக் கட்டி இழுத்து வரும்படி மன்னனுக்குக் கட்டளையிட்டார். மன்னனும் அவர் கூற்றுக் கொப்பக் காவலர்களை அனுப்பி, காளமேகப் புலவரை அழைத்து வரும்படி பணித்தார்.

உடனே காவலர்கள் காளமேகப்புலவரை அரச அவைக்கு அழைத்துவர, அதிமதுரகவிராயர் முதல் அறுபத்துநான்கு தண்டிகைப் புலவர்களும், காளமேகத்தைப் பார்த்து இழித்தும் பழித்தும் கூறினுர்கள்.

இதையறிந்த காளமேகப்புலவர் "நீங்கள் யார்?" என்று கேட்க, அதற்கு அவர்கள் "நாங்கள் கவிகள்" என்று கூற, உடனே காளமேகப்புலவர் ஏளனத்தோடு நகைத்துவிட்டு, "கவிகளென்ருல் குரங்குகளல்லவா? அப்படியாளுல் உங்கட்கு வாலெங்கே? நீண்ட நகங்களெங்கே? நாலுகாலெங்கே? பீளை வழியும் கண்களெங்கே? இவை அத்தனையும் உங்களிடம் இல்லையே. பின் ஏன் இப்பெயரை வைத்துக்கொண்டீர்கள். ஓகோ! நீங்கள் புவியரசர்கள் போற்றிடும் கவியரசர்களா? என்று சரமாரியாகக் . கேள்விக் கணைகளைத் தொடுத்துக் கேளிக்கை புரிந்தார்.

இந்த இழிந்த தன்மைக்கு இலக்கான அதிமதுரகவிராயர் சீற்றங்கொண்டு, "ஏ...! காளமேகமே...! மூச்சு விடுவதற்குள் முந்நூறு நானூறு பாட்டுகளும்; ஆச்சு என்பதற்குள் ஆயிரம் பாட்டுகளும் பாடுகின்றவரே! வீண் ஆடம்பரத்திற்காக உன்னுடைய கள்ளக்கவிக் கடையைப்பரப்பவேண்டாம். இந்த மட்டிலே உன்கவியை ஏறக்கட்டு" என்று கூறி, இறுதியாக யமகண்டம் அமைத்துக் காளமேகப் புலவரிடம் பலவாருன வினுக்களைத் தொடுத்தார்கள். காளமேகப் புலவர் அவர்கள் விடுத்த வினுக்களுக்குத் தக்கவாறு பாடி வெற்றியடைந்தார். இதையறிந்த அதிமதுரகவிராயர் முதல் அறுபத்து நான்கு

தண்டிகைப் புலவர்களும், காளமேகப் புலவரின் விவேகத்தைக் கண்டு வியந்து, அவர்மீது பொருமை கொண்டு வஞ்சகத்தால் அவரைச் சாய்க்க எண்ணியதையறிந்த காளமேகப்புலவர் அந் நாட்டையும் அந்நாட்டிலுள்ள புலவர்களேயும் அழிக்குமாறு வானை நோக்கித் தங்கருத்தைக் கூறிக் கட்டளேயிட்டார். அந்த வகையை நீங்களும் கூர்ந்து நோக்குங்கள்!

"வானமே! திருமலேயூரில் புறம் கூறுகின்றவரும், கொலே புரிவோரும், வஞ்சகம் செய்வோரும், நன்ருகக்கற்றும் வலிய இளேய எருதுகளேப்போல, வீணுக வாய்க்கு வந்தபடி பிதற்று கின்ற பேயர்களும் நிறைந்துள்ள ஊராகும். ஆகவே இந்த மேகம் நாளேயதின்மே வான்நீர் பொழிவதைவிட்டு, மேகங் கூடாது வெளுப்படைந்து, மிகவும் கோபித்து மண்மழை பொழி யக்கடவது" என்ருர்.

இதில் "கற்றுக் காளேயாய்க் கதறுமூர்" என்று கூறிய தற்குக் காரணம்? "நல்ல மாட்டிற்கு ஒரு அடி-நல்ல மனிதனுக்கு ஒரு சொல்" என்ற பழமொழிக்கொப்பத் திருமலேயூரிலுள்ள கவிராயர்கள், எத்துணே கற்றும் கற்றபடி நடக்காததை யொட்டியும், காளமேகம் பல நெறிகளேக் காட்டியும் திருந்தாம லிருப்பதைக் கண்டும் நன்ருகக்கற்று வீணுகப் பிதற்றும் மாடு கள் என்று மனம் நொந்து கூறினுர். தவிரவும் வானில் நிறைந் திருப்பதுநீர், பூமியில் நிறைந்திருப்பது மண்: வான்மழையை நீக்கி பூமியிலுள்ள மண்ணே மழையாகப் பொழிய வேண்டு மென்று, காளமேகப் புலவர் வானத்துக்குக் கட்டளேயிட்டதை ஆய்ந்தால், நல்ல புலவர்கள் இருக்கவேண்டிய நாட்டில், பொல்லாதவர்கள் புடைசூழ்ந்து இருப்பதைக் காட்டிலும் அழி வதே சாலச் சிறந்தது என்ற அரிய கருத்தையுள்ளடக்கி,

"*கோள ரிருக்குமூர் கோள்கரவு கற்றவூர்
காளேகளாய் நின்று கதறுமூர்—நாளேயே
விண்மாரி யற்று வெளுத்து மிகக்கறுத்து
மண்மாரி பெய்கவிந்த வான்". (*தனிப்பாடல் திரட்டு 130*)

என்று வசை கொளப்பாடினுர்.

* கோளர் - புறங்கூறுபவர்; கோள் - கொலே செய்பர்; கரவு - வஞ்ச கங் கொண்டவர்; மிகக்கறுத்து - மிகவும் கோபித்து.

இதுகாறும் நந்தமிழ்ப் புலவர்கள் நிலம், நீர், தீ, காற்று, வான் முதலியவைகளோடு உரையாடி, அவைகளின் இயல்புக் கேற்றவாறு ஏவல் விட்டதையும், இன்னும் பிறவற்றையும் நாம் நேரிற் கண்டு நெஞ்ச மகிழ்ந்தோம். இனித் தெய்வப்புலவர் திருவள்ளுவர் ஒருதலைவனைத் திங்களோடு உரையாடவைக்கும் திறமையை நோக்குவோம்:

ஒரு தலைவன் பொருள் பெறக்கருதித் தன் தலைவியிடம் விடைபெற்றுக்கொண்டு வெளியூருக்குச் சென்றான். அவ்வாறு, அவன் சென்றபிறகு தன்னகத்தில் குடிகொண்ட தலைவியை ஒரு நொடியேனும் மறந்திருக்க முடியாதவனாகி விட்டான். அதனால் அவனுக்குக் கானமயிலைக் காணுகின்ற நேரத்தில், தன் தலைவியின் ஒயிலின் சாயல் ஒருங்கே தோன்றியது: கருங் குயிலிசையைக் கேட்ட மாத்திரத்தில், அவளின் கனிவுமிக்க சொற்களின் கவனமேற்பட்டது. அன்றலர்ந்த மலரை அணுகி நோக்கும்போது, அவளின் அழகிய விழியை ஒத்திருப்பதாகக் காட்சி யளித்தது. அங்கண் விசும்பினில் தொங்கியிருக்கும் அம்புலியைப் பார்க்கும் போது, தனது அன்புத் தலைவியின் அழகை யொத்த முகம் அவன் நினைவில் தோன்றி நிலைத்தது. அதனால் அவன் மனத்தில் ஏதோ ஒருவித மாறுதல் ஏற்பட்டது. அதன் விளைவு? தன் தலைவியின் முகத்துக்கும் – அந்தத் தண் ணிலவின் பொலிவுக்கு முள்ள தகுதி திறமையைச் சீர்தூக்கிப் பார்த்து, அந்நிலவோடு உரையாடும் நெஞ்சுரம் பெற்றான். அந்த அரியவுரையை நீங்களும் அவன்கண் சென்று கேளுங்கள்.

"ஏ! நிலவே....! மலரையொத்த கண்ணிணைக் கொண்ட எந் தலைவியின் முக அழகை நீ ஒத்திருப்பாயானால், நான் காணு வதைப் போல், பலர் காணத் தோன்றாதிருப்பாயாக!"

இதில் அத்தலைவன் நிலவைப் பார்த்துப் பலர் காணத் தோன்றாதிருக்கும்படி கூறக் காரண மென்னை? கற்புடைய தன் தலைவியின் முகத்தினழகைத் தானே கண்டுசுவைத்ததினால், பலர் பார்க்கும்படி வானத்திலூர்கின்ற திங்கள் கற்பில்லாமல் இருப்பதையொட்டி இங்ஙனம் இழித்துக் கூறியுள்ளான். அவ்

வாறு இழித்துக் கூறியதனால் கற்புடைய தன்தலைவியின் முகத்திற்குப் பலர் பார்க்கும்படி விளங்கும் திங்கள் ஒப்பாகாது. தவிரவும், திங்களுக்கு மாசு உண்டு. ஆனால் தன்தலைவியின் முகத்தில் அம்மாசு கிடையாது. எனவே,

"மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயின்
பலர்காணத் தோன்றல் மதி" என்றான். (குறள் 1119)

என்னுங் குறளைக் கண்டு தெளிக:

இதை விடுத்து, தக்க நாட்டிலுள்ள கேமமாபுரத்தை நோக்கி நடப்போம்! இந்நகரில் வேதவணிகனான சுபத்திரன் என்பவன் வசித்து வந்தான். இவனுக்குக் கேமசரி என்ற ஒரு மகள் இருந்தாள். கேமசரியின் பெற்றோர்கள் அவள் பிறந்த போது 'இவளுக்கு எப்படிப் பட்ட கணவன் வாய்ப்பான்? என்று அறியச் சாதகம் கணித்தனர். இவள் தக்கபருவ மெய்தியபின் எந்த ஆடவனைக்கண்டு நாணுகின்றாளோ: அவனே இவளுக்குக் கணவனாக வாய்க்கப் பெறுவான்' என்று சோதிடன் கூறினான், அதுமுதல் சுபத்திரன் தன்நாட்டிற்குச் சிறந்த ஆடவர் எவர் வந்தாலும் அவரை அழைத்துச் சென்று விருந்து படைப்பான்.

இவ்வாறு நீண்டநாள் செய்துவந்த பிறகு, சீவகன் அவ்விடம் வந்தான். சீவகனுடைய அங்க அழகைக் கண்ட சுபத்திரன் அவனைத் தன் இல்லத்திற்கு அழைத்துச் சென்றான். இல்லம் சென்றதும் கேமசரி சீவகனைக் கண்டாள், நாணங் கொண்டாள் – நீங்கா அன்பு கொண்டாள் – நிலையான காதல் பெற்றாள்: அக்காதல் கால வேகத்தில் நீண்டு வளர்ந்தது. இதை யறிந்த சுபத்திரன் சீவகனுக்கும் – கேமசரிக்கும் திருமணம் முடித்து உளமுவந்தான். சீவகனும் அந்நங்கை நல்லாளோடு இரண்டு திங்கள் இருந்து இன்பம் அனுபவித்தான். இறுதியாக அவளிடம் கூறாமலே வெளியேறிவிட்டான்.

காலமோ காற்றினும் கடிய வேகத்தோடு நாட்களை நகர்த்திச் சென்றது. சீவகனைப் பிரிந்த கேமசரி, அவன்பால் கொண்ட அன்பினால் துடித்தாள் - துவண்டாள் - துயருற்றாள்: ஏக்கமே உருவான அவ்வேந்திழை தன் எதிரே காணும்

இயற்கைகளை யெல்லாம் நோக்கி, 'என் இதயங் கவர்ந்த எழிலரசன் சீவகன் எங்கே இருக்கிறான்?' என்று கேட்க முனைந்தாள். அதற்கு ஆதாரம் இதோ,

"தினைப்புனத்தில் வாழுகின்ற தோகை மயிலே! சொல்லொணு மலர்களோடு மணம் வீசும் சோலையே! நீடி நெளிந்தோடும் நீர் நிலையே! அழகு பொருந்தியுள்ள சுரபுன்னை மரமே! அசைக்க முடியாத தோற்றத்தோடு நிலைத்து நிற்கும் மாமலையே! அலையே உருக்கொண்ட ஆழ்கடலே! நான் உங்களை வணங்குகின்றேன்! பலவகை மணிகளைக் கோத்து ஒளிவிடும் அணிகளைப் பூண்டவனான என்கணவனுடன் நான் மீண்டும் வாழும் வாய்ப்பைப் பெறுவேனா? அவ்வாறு நான் பெறுவேன் என்றால், அவன் இருக்குமிடத்தை எனக்குக் கூறுங்கள்!" என்று நயந்து கேட்டாள்.

எப்படியிருக்கிறது அம்மெல்லியலாளின் உணர்வாற்றல்! தன்னோடு எதிர்பேச முடியாதவைகளிடம் தன்கொழுநன் இருக்குமிடத்தைக் காட்டு என்று கேட்பதை நோக்கினால், அவள் அவன்பால் கொண்ட அன்பின் பெருக்கன்றோ இங்ஙனம் அவளை உரையாடச் செய்தது. இதைக் கருதியே தான் வள்ளுவர் 'அன்புக்கு அடைக்கும் தாழ்ப்பாள்' இல்லை என்று கூறினார் போலும்.

இத்தெரிவையின் திறனறிந்து, திருத்தக்கதேவர் கூறுவதைச் செய்யுள் வடிவத்திலே கேளுங்கள்:




"புனமா மயிலே! பொழிலே! புனலே!
வனமார் வழையே! வரையே! திரையே!
இனமா மணிசூழ் எரிபூ ணவனைத்
துனயான் பெறுகோ? தொழுதேன்! உரையீர்!
(சீவகசிந்தாமணி 4-வது இலம்பகம் 108-வது செய்யுள்)

என்னுஞ் செய்யுளிளறிக.

அதோ பாருங்கள்.......! நம்மை நோக்கி வரும் அந்தப் பெரியாரை, நந்தமிழ் வளர்வதற்குப் பாடுபட்ட புலவர்களில் இவரும் ஒருவர். ஆ...ஆ...! இவரிடம் பொதிந்துள்ள பொலிவு

தான் என்னே? கற்பனைக் கீறல் படிந்த நெற்றி - கனிவாக நோக்கிடும் பார்வை - கவலை காணுத் தோற்றம்-கவர்ச்சியான உடல் அமைப்பு இத்துணையும் ஒருங்கே உருவமாகப் பெற்ற இவர்தான் புகழேந்திப் புலவர்.

அவர் விரைந்து செல்லும் பாதையிலே நாமும் பின் தொடர்ந்து செல்வோம். அடடா...! அதிவிரைவில் சென்ற அப்புலவர் நிடத நாட்டு அரண்மனைக்குள் புகுந்து விட்டாரே! ஆகவே நாமும் அந்நிடத நாட்டு அரண்மனைக்குள் புகுவோம்!.

கண்ணைப் பறிக்கும் நவமணிகளை முடியாகச் சூட்டி - கண்டார் வியக்கும் அணிகளை மார்பிலே பூட்டி-கொள்ளாரை ஓட்டிடுங் கூர்வேலைக் கரத்திலே ஏந்தி-நல்லவர்களை வர வேற்கும் அன்பை அகத்திலே தாங்கி- புகழேந்தியார் புகழ்பாட புடை சூழ்ந்த மக்களெல்லாம் போற்றித் துதிபாட-அடக்கமே வடிவாகி, அதோ! அரியாசனத்தில் அமர்ந்திருக்கிறுனே அவன் தான் நிடத நாட்டு மன்னன் நளன். அவன் அருகே இருப்பவள் தான் அவன் மனைவி தமயந்தி.

நளன் தன்னுட்டைச் சீரோடும் சிறப்போடும் ஆண்டு வந்தான். இவன் ஆட்சியின் மாட்சியைக் கேட்ட கலிதேவன் இவன் மீது சினங்கொண்டான். நளனையும் தமயந்தியையும் பிரிக்க எண்ணினுன். சில ஆண்டுகள் கழிந்த பிறகு, புட்கரன் என்ற மன்னனை நளனேடு சூதாட ஏவினுன். காலநிலையுணராத நளன், தன்னுட்டையும் நகரத்தையும் இன்னும் இருக்கும் அரச செல்வத்தையும் பணயமாக வைத்துச் சூதாடித் தோற்றுன். பிறகுதான் ஈன்ற மக்கள் இருவரையும், தன் மனைவியின் பிறந்த விட்டிற்கு அனுப்பிவிட்டுத் தன்மனைவி தமயந்தியோடு நாட்டை விட்டுக் காட்டுக்கேகினுன். அங்கு நள்ளிரவில் தன் அன்பு மனைவி தமயந்தியை உறங்கும் போது, அவளைத் தன்னந்தனி யாக விட்டுவிட்டுத் தனித்துச் சென்றுன். தமயந்தி விழித்தாள்- தன்கணவனைக் காணுது கண்ணிர் உகுத்தாள். பிறகு கவலைக் கடலில் மூழ்கினுள்.

தமயந்தியைப் பிரிந்து சென்ற நளன் காட்டில் தீவாய்ப் பட்டு வருந்திய கார்க்கோடகன் என்னும் பாம்பைத் தீயிலிருந்து

மீட்டான். உடனே அப்பாம்பு அவனைத் தீண்ட நளன் கறுத்து விட்டான்! இதைக் கண்ட கார்க்கோடகன் நளனுக்கு நல்ல ஆடைகளைக் கொடுத்து "இந்த ஆடைகளை உடுத்துக் கொண் டால் நீ பழைய உருவத்தைப் பெறுவாய்" என்று கூறியது. அந்த ஆடைகளைப் பெற்றுக் கொண்டு நளன் அயோத்தி சென்று, அந்நகர் மன்னனான இருதுபன்னன்பால் மடைத் தொழிலும், தேர் ஓட்டும் தொழிலும் செய்யும் பணியாளாக இருக்கும் பொருட்டு வாகுவன் என்ற புனை பெயரோடு சென்றான்.

நளன் கார்க்கோடகனை விட்டுக் கடற்கரை வழியே சென்றான். அங்குள்ள நாரை, நண்டு, முதலியவற்றைக் கண்டான். அவற்றின் இயல்பைக் கண்டு மனம் வருந்தி, கடற் கரையிலிருந்து கடலில் புகும் நண்டைப்பார்த்து உரையாடும் உணர்வின் தன்மையை நீங்கள் நேரில் காணுங்கள்;

"நண்டே! எனது அன்புக் கிடமான மனைவியைக் காரி ருளில் காட்டிலே கைவிட்டு வந்த பாவியாகிய என்னைப் பார்க்கக் கூடாதென்று நினைத்துக் கடலில் ஓடி ஒளிந்துக் கொள்கிறாயா? அல்லது வேறு காரணம் ஏதேனும் உண்டோ? சொல்" என்றான்

பொதுவாகக் கடற்கரையில் உள்ள நண்டுகள் மனிதர் களைக் கண்டவுடன் அவர்களுக்கு அஞ்சியோடி வளைக்குள் மறைதல் இயல்பு. அந்த இயல்பின்படியே இங்கு நளனைக் கண்டபோதும் நண்டு ஓடி மறைந்தது. அது தன்னைப் பார்க்கக் கூடாது என்ற காரணத்தால் நிகழ்ந்த செய்கையாகக் கற்பித் துக்கூறி நளன் இரங்கினான். குறிப்பாக மனத்தில் ஒன்றை அதிகமாகச் சிந்தனை செய்து கொண்டிருப்பவர் முன் நிகழ்வன எல்லாம் அதன் தொடர்பாகவே நிகழ்வனவாய்த் தோன்றும். ஆதலின் இங்குத் தமயந்தியின் பிரிவு குறித்து மிகவும் வருந்தி யிருந்த நளனுக்கும் நண்டின் செய்கை தன்னைக் குறித்தே நிகழ்ந்ததாகத் தோன்றியுள்ளது. இதனை,

"காதலியைக் காரிருளில் கானகத்தே கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ — நாதம்

அளிக்கின்ற ஆழிவாய் ஆங்கலவ ஓடி
ஒளிக்கின்ற தென்னே உரை?" (நளவெண்பா 354)

என்னும் வெண்பாவை நோக்குக.

இதுகாறும் நீங்கள் என்னேடு இத்துணை தூரம் வந்து பண்டைப்பனுவலகத்தைச் சுற்றிப் பார்வையிட்டீர்கள். அதோடு பண்டைப் புலவர்களில், ஔவையார், இளங்கோவடிகள், பட்டினத்தார், காளமேகப்புலவர், திருவள்ளுவர், திருத்தக்க தேவர், புகழேந்தி ஆகிய புலவர்களையும் அவர்களால் உருவாக்கப்பட்ட பாத்திரங்களையும் அவை இயற்கையோடு உரையாடிய விவேகத்தையும் கண்டு வியந்தீர்கள்.

இப்படிப்பட்ட இயற்கைகளில் ஒருசிலவற்றை நாம் கண்களால் காண்கின்றேம். ஆனல் அன்பு, அறிவு, காற்று இன்னும் சில பலவற்றை நம்மால் காணமுடிவதில்லை. அதே நேரத்தில் விவேகத்தின் உச்சியிலே நிற்கும் புலவர்களோ, நம்மால் காணமுடியாதவைகளையும் கண்டு, அறியமுடியாதவைகளின் அகத்தோடு ஒன்றி, அவைகளோடு உளம் உவந்து உரையாடித்தாம் கண்டவற்றைப் பிறரும் காணச் செய்கின்றனர். அதனை நாம் காணுந்தோறும் கேட்குந்தோறும் வியப்பிலாழ்ந்து விடுகின்றேம்.

இதனைக் கருதியேதான், தமிழ்த்தலைவர் மறைமலையடிகளார் "இக்காலநூலைப் படிப்பவன் இரும்பைக் கடிப்பவன்; அக்கால நூலைப்படிப்பவன் கரும்பைக் கடிப்பவன்" என்று கூறிப்போந்தார். ஆகவே இனிநாம் பண்டைப் புலவர்களையும், அவர்கள் யாத்த பனுவல்களின் விவேகத்தையும் வெளிக்குக் காட்டி, விண்ணையும் மண்ணையும் வியப்படையச் செய்வோமாக!



# அப்பரின் அருள் வாக்கு

சைவப்புலவர் பண்டித,
**திரு. அ. சிவசுப்பிரமணிய பிள்ளை அவர்கள்,**
சமயச் சொற்பொழிவாளர், நாகர்கோயில்.

"திருநாமம் அஞ்செழுத்துஞ் செப்பா ராகில்
தீவண்ணர் திறமொருகால் பேசா ராகில்
ஒருகாலுந் திருக்கோயில் சூழா ராகில்
உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணா ராகில்
அருநோய்கள் கெடவெண்ணீ றணியா ராகில்
அளியற்றார் பிறந்தவா றேதோ என்னிற்
பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்துஞ் செத்துப்
பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின் றாரே". (அப்பர்)

உலகில் மக்கட் பிறப்பே மாண்புடையது. அத்தகைய பிறப்பு உயிர் இருக்கும் வரைதான் போற்றப்படும். உடம்பினுள் உயிர் இருப்பதுபோல் உயிரினுள்ளே இறைவன் இருக்கிறான். இதைச் சிவம் என்கிறோம். இதனை அறிவதே சிறந்த தவமாகும். இல்லையாயின் அவமே வாழ்வோம். வாழ்வில் பயனில்லை. இதனைச் சாத்திரங்களினால் அறியலாம். சாத்திரங்களைப் படிப்பதிலும் தோத்திரங்களைப் படிப்பது எளிது. தோத்திரங்களிலும் சாத்திரக் கருத்துக்கள் மறைந்துள்ளன. அனுபவமும் இறையருள் நலங்களும் ஒருங்கே பெற்ற அப்பர் பெருமானின் தேவாரப் பாடல்கள் நமக்கு உறுதுணை யளிப்பவனவாகும். சிவ நாமம், பிறவிக் கடலில் தவிக்கும் மக்களுக்குத் தெப்பம் போல் அமைந்து "இனித்தமுடன் எடுத்த பொற்பாத நிழலின்" கீழ் பெருவாழ்வு வாழத்துணை புரியத்தக்கது.

"உலகெல்லாமாகி வேறாய் உடனுமாய் ஒளியாய் அலகிலா உயிர்களை" ஆணையில் செலுத்தும் இறைவனை நாம் அறிந்து

கொள்வது எவ்வாறு? அவரால் நாம் அடையும் பயன் என்ன? அவரை வணங்கினுல் பெறும் பயன்யாது? வணங்காதிருந்தால் அடையும் தீமை என்ன? என்பன போன்றவற்றிற்குப் பதில் கூறுவதே இத்தாண்டகம். இதனை நன்கு கவனிப்போம். இறைவனுடைய நாமமே ஐந்தெழுத்து. ஐந்தெழுத்தின் வடிவமாகவே இறைவனுமிருக்கின்ருன். இதனை உண்மை விளக்கத்தில்

"ஆடும் படிகேள்நல் அம்பலத்தான் ஐயனே
நாடும் திருவடியி லேநகரம்—கூடும்
மகரம் உதரம் வளர்தோள் சிகரம்
பகரும்முகம் வாமுடியப் பார்'.

என்று கூறியுள்ளார்.

"அஞ்செழுத்தால் ஆன்மாவை அரனுடைய பரிசும் அரனுருவும் அஞ்செழுத்தா லமைந்தமையும் அறிந்து" (சித்தியார்) என்பதற்கொப்ப அஞ்செழுத்தை குருவருளினுல் அறிந்து தினமும் இதயத்தால் அரனை வணங்கி வரல் வேண்டும். "வெம்பிறவி வேலைதனில் விழும்" மக்களுக்கு சிவநாமம் ஓதினுல் உய்திபெறலாம். ஆகவே "துஞ்சலும் துஞ்சலிலாத போழ்தும் நெஞ்சகம் நினைந்து வாழ்த்த வேண்டியது அஞ்செழுத்தேயாகும்". அதனுல் யமனையும் வெல்லலாம், இறையருளையும் பெறலாம்.

இன்னும் இறைவன் திறத்தினை நாள்தோறும் பேசிவரல் வேண்டும். தன்னை மதியாது செய்த சிலருக்கு அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்பதைக் காட்டியும் உள்ளான். ஆன்மாக்களின் பொருட்டு இறைவன் பலவித வடிவங்களில் தோன்றி அருள் கொடுத்திருக்கிருன். "தாபர சங்கமம் என்றிரண்டு உருவினில் நின்று மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க்கு அருளை வைப்பன்". அவைகளையும் நாம் அறிந்து கொள்ள வேண்டும்.

போகியாயிருந்துயிர்க்கு போகத்தையும் யோகியாயிருந்து யோகமுத்தி உதவுவதற்கும் கோரவடிவம் கொண்டு செய்த வினையைத்தீர்ப்பதற்கு மாகத்தான் பலவடிவங்களில் தோன்றுகிருன். இன்பத்தையும் துன்பத்தையும் நமக்குக் கொடுத்து அவன் அருளையே நமக்குத் தருகிருன். தன் அடியார்களை

உலகினருக்கு அறிவிக்கும் பொருட்டும், அடியார் குறைகளை நீக்கும் பொருட்டும் பலவிதத் திருவிளையாடல்களைச் செய்திருக்கிறுன். அவைகளைத் தினமும் அறிந்து அவர் திறத்தினைப் பேசிவரல் வேண்டும்.

இனி நம் பொருட்டு அருவுருவத் திருமேனி கொண்டு கோயில் தோறும் எழுந்தருளியுள்ளார். அவர் வீற்றிருக்கும் கோயில்களைச் சிவன் இருக்கும் இடமாக எண்ணி வணங்கிவரல் வேண்டும். உலகப் பற்றிலிருந்து கவலையில்லாமல் விலகிச் சிறிது நேரம் பரம் பொருளிடம் மனதைச் செலுத்தும் இடமே கோயிலாகும். கோயில் என்பதற்குத் தலைவன் குடிகொண்டிருக்கும் இடம் என்பது பொருள். "குறிகளும் அடையாளமும் கோயிலும் அவர் நின்ற நெறியை" அறிவதற்காகவே தான். அங்கு சென்று வழிபடும்போது அங்கிருக்கும் திருமேனியைச் சிவனெனவே கண்டு அங்கு சிவனுறைகிறுன் என்பதையுமறிந்து காலை மாலை சென்று வழிபட்டு வரல் வேண்டும். கால்பெற்ற பயனுல் கோயிலை வலம்வந்தும் கண் பெற்ற பயனுல் கண்டுகளித்தும் கைகளினுல் கூப்பித்தொழுதும் நெஞ்சால் நினைத்தும், வாயால் வாழ்த்தியும் வழிபட வேண்டும்.

இறைவர் தாம் விரும்பும் உண்மையாவது பூசையே. உமா தேவியாரும் இறைவனிடம் "நாதா நீமொழிந்த ஆகமத்தின் இயல்பினுல் உன்னை அர்ச்சனைபுரியப் பொங்குகின்றது என் ஆசை" என்கின்றுள். ஆகவே பூசையினுல் நாமும் இறைவனை வழிபட வேண்டும். பூசையில் மலர் பறித்திட்டுப் பூசை செய்வது சிறப்புடையது. "புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு" அதுகண்டு இறைவன் அருள் செய்வான் என்று திருமூலரும் "சலம் பூவொடுதூபம் மறந்தறியேன்", என்று அப்பர் பெருமானும் கூறுகிறுர். பூவும் நீரும் கொண்டு கற்றைச் சடையானை வழிபட வேண்டும் என்கிறுர். ஆகவே நெக்கு நெக்குருகி வழிபட்டால் இறைவர்நம் மனதில் புக்கு நிற்பார். அன்பில்லாமல் வழிபட்டால் அவர் நம்மைப் பார்த்துச் சிரித்து விலகி நிற்பார். இதனையே "பொக்கம் மிக்கவர் பூவும் நீரும் கண்டு நக்குநிற்பன் அவர் தம்மை நாணியே", என்று அப்பர் அருளியுள்ளார். ஆகவே மலரிட்டுப் பூசை செய்வதில்

மனம் ஒருமித்து வழிபட வேண்டும். நித்தம் ஆயிரம் பூக் கொண்டு திருமாலே வழிபட்டாரென்ருல் மலர் கொண்டு வழி படுதலின் சிறப்பு எவ்வளவு சிறந்தது என்பதை அறியலாம்.

இனி இறைவன் விரும்பி அணிவது நீறு. அது துதிக்கப் படுவது. வானவர் மேலது. நம் சமயத்துள்ளது. அதுவே நாமும் அணியத் தக்கது. பலவிதத் துன்பத்தை நீக்கும். பிறப்பிற்குக் காரணமான இறப்பினை நீக்கும். எல்லாப் பொருள்களின் முடி வாய்த் திகழ்வது. யான் எனது என்னும் செருக்கை மாற்றி இறையருளில் சேர்க்கும். பற்று, அவா என்ற இரண்டையும் நீக்கிப் பரமனடி சேர்க்கும். நன்னெறியைக் காட்டும். அத் தகைய நீற்றைக் காதலாகிக் கசிந்து உளமுருகி நாம் எல்லோரும் அணிந்து இறைவனுடைய பெருங்கருணைக்குப் பாத்திரராக வேண்டும்.

மேற்கூறிய ஐந்தும் ஐந்தெழுத்துப் போன்ற சிறப்புடைய தாக இருப்பதினல் ஐந்தையும் நாம் வாழ்நாளில் தவருது கடைப்பிடித்து ஒழுகி வரவேண்டும். இதுவே வாழ்க்கையின் பயனும். இதனைக் கைக்கொண்டு ஒழுகாதவர் மானிடராய்த் தோன்றியதின் பயனை அடைய மாட்டார்கள். வாய்த்தது நம் தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின் என்பதையும், இப்பிறவி தப்பினல் எப்பிறவி வாய்க்குமோ என்பதை அறிந்தவர்கள் வீண் காலம் போக்க மாட்டார்கள்.

“வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சையும் தந்த தலை வனை” வணங்கி அவன் திறத்தைப் புகழாதவர் பலவிதமான பெரு நோயினல் மிகவும் வருந்தி மீண்டும், மீண்டும் பலவிதமான யோனிபேதமுடைய உயிர்களிலே சென்று பிறந்தும், இறந்தும் வருந்தியும் பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்ருர்கள்.

ஆகவே இப்பிறவியின் பயன் அரனை வழிபட்டு உய்தி பெறுவதோடு தீராத நோயாகிய பிறவி நோயைத் தீர்க்க மேற்கூறியவைகளைக் கடைப்பிடித்து மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித் தீராத நோய் தீர்த்தருளவல்லவனுகிய எம்பெரு மானைப் போற்றிப் பணிந்து வந்தால் எந்தையிணையடி நிழலில் தங்கியிருப்பர் என்பதில் சிறிதேனும் ஐயமில்லை.

---

உ

சிவமயம்

பாலருவாயர் துணை

# அருணந்தி முனிவர் அருஞ்செயல் மாலை

(இரண்டாம் பகுதி)

தேவகோட்டை "செட்டிநாடு" இதழாசிரியர்
"தருமபுர ஆதீன வித்துவான், திருவண்ணாமலை ஆதீன விரிவுரையரசு,
மதுரை ஆதீனச் சித்தாந்த சைவ வித்தகர்
சித்தாந்தப் புலவர் மாமணி, பாலகவி"
**வயிநாகரம். திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்**
**இயற்றியது.**

---

[மலர் 12, இதழ் 8, பக்கம் 457-இன் தொடர்பு]

தில்லைப் பதியிற் பல்லாண்டு சிவபு ராணக் கல்பதிக்கத்
திருவெம் பாவை யெழுத்துடனே தேரின் சேலை கொட்டகைக்கு,
நல்ல வொலியைப் பெருக்கிக்கு நயந்து செலவு செய்ததொகை
நாடும் பதினு லாயிரத்தை நயந்த வைநூ ருங்குடந்தை,
யெல்லைப் புறம்ப யங்கோயி லிலங்கு பணிக்கு மின்விளக்குக்
கேற்ற தேர்ச்சே லைக்கேழா யிரத்தோ டேழு நூருகு, மல்லற்
செந்தில் சுவாமிமலை வளமார் குமரகோட்டத்தில் மாணு மேகாம்
பரமயிலை மன்னுந் தணிகைத் தலங்களிலே 9

செம்மை பசுமை "சிவசிவ" நற் றிப வொளிகொள் விளக்
கமைக்கத் திகழு மையைந் தாநூறு தில்லை யப்பர் நினைவாக,
நம்மை யாளுந் தேவார வைப்பு நிதியா நல்குதொகை நாடும்
பதினு ருயிரஞ்சீர் நண்ணும் பனசைத் திருத்தலத்தி, லெம்மை
யாண்ட குமரகுரு வேந்தன் மாகே சுரபூசைக் கீந்த நிதிபத்
தாயிரம்வே லேந்தும் பெருமான் சட்டியினி, லிம்மைக் கச்சிப்
பெரும்பதியி லினிய கந்த புராணத்தை யெடுத்துப் பேசவழங்கு
நிதி யேழைந் தான வாயிரமே 10

சீரார் பனசைக் காசிமடந் தினஞ்செய் மாகே சுரபூசை
திகழுங் குமர குருநினைவிற் சிறக்க விருப தாயிரமிப், பாரார்

காசிக் காளத்திப் பரமன் பூசை நிதியாகப் பண்பா ரரசர் காளத்தி பரவு நினைவா லைம்பதுநா, றேரார் நாகர் கோயிலினி லிலங்குந் தானு மாலயப்பே ரினிய வாசிப் பகத்தினுக்கிங் கீந்த தேழஞ் சானூறே, நாரார் காசித் திருத்தலத்தில் ஞானக் குழவி நினைவாக நாடு மன்னம் பாலிப்பு நடக்க நிதியே மூாயிரமே 11

திருவா ரூரில் வெள்ளிமுனி செப்பு மரிய முதுமொழிக்குச் சிறக்கும் பரிசு நிதியேழைப் பெருக்கு மஞ்சு நூருகு, முருவார் பனசைத் திருத்தலத்தி லுகந்த செந்தி லாண்டவனு ருவக்கு மருளிப் பாடிரண்டா யுளநூ ருயி ரம்மாகும், வருவார்க் கருளு மிடைமருதின் மருவுந் தைப்பூ சந்தன்னில் வழங்கு முணவுக் கைந்தாக மன்னு மாயி ரஞ்சிவத்தை, மருவா நிற்குந் திருத் தொண்டர் மகிழும் புராணந் தில்லையினில் வளமாச் சொல்ல வழங்குநிதி வாய்த்த வேழா யிரமாமே 12

காசிப் பதியிற் குமரகுரு நினைவிற் சோறு கனிந்தூட்டக் கருது மேழா யிரமவரைக் கருத்துட் கொண்டு கடகமதி, யீச ரிராமே சுரத்திற்சோ றிடுதற் கேழஞ் சானூரு மினிய மதுரைத் திருவிளையாட் டியம்ப வேழா யிரமாகுங், காசித் தலத்திற் குமர குரு நினைவிற் கன்னி மதியன்னங் களிப்பால் வழங்க வேழாகக் கானு மாயி ரம்மாங்கே, தேசிற் சாமி நாதமுனி திருநா ளன்னம் பாலிப்புச் செய்ய மூவா யிரமடுத்துத் திகழு மைந்து நூருமே 13

செங்கட் சோழர் நினைவாகத் திங்கண் மாசி யினிற்காசிச் செல்வப் பதியிற் சோறளித்தல் செய்ய வேழஞ் சானூறே, யெங்கண் மதுரைத் திருத்தொண்ட ரினிய புராண விரி வுரைக்கா யீந்த தேழா யிரமாங்கே யென்று மிளையான் புராணத்தைத், தங்கு மகிழ்விற் சொல்வதற்குத் தந்த நிதிமூ வாயிரத்தைச் சார்ந்த வைந்து நூருகுந் தகவார் தில்லை யந்த ணர்கள், துங்க வன்னம் பாலிப்புத் தொகைநூற் றைம்ப தாயிர மாஞ் சொல்லுஞ் சாமி நாதமுனி தூய நினைவு நிற்பதற்கே. 14

———

[தொடரும்]

# இலக்கிய இன்பம்

திரு S. சங்கரநாராயணன் அவர்கள்,
தாமரங்கோட்டை P. O., பட்டுக்கோட்டை தாலுகா.

பசுந்தமிழையும் பக்தியையும் இரண்டறக்கலந்து ஊட்டு கின்ற பாடல்கள் தமிழ் மொழியில் எண்ணிறந்தன. தேவார - திருவாசகங்களை அந்த முறையில் தமிழ் நாடு கற்க வேண்டு மென்பது என்னுடைய ஆசை. தமிழ் மக்கள் தேவாரத்தையும் திருவாசகத்தையும் திருவாய் மொழியையும் நன்கு படிக்க வேண்டும். ஒரு தேவாரப் பாட்டைக் கேளுங்கள். தமிழ் நடம்புரி கின்றதா இல்லையா என்று பாருங்கள்.

வலம்வந்த மடவார்கள் நடமாட
 முழவதிர மழையென்றஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரமேறி
 முகில்பார்க்கும் திருவையாறே!

திருவையாற்றிலே கோயிலைச் சுற்றிச் சோலை இருக் கின்றது. இப்பொழுதும் இருக்கின்றது. அந்தச் சோலையிலே வானரங்கள் வாழ்கின்றன. சோலை இருந்தால் வானரம் எப் பொழுதும் உண்டல்லவா? கோயிலைச் சுற்றி மாதர்கள் நடன மாடிக் கொண்டு வருகின்றார்கள். பரவசமாகிப் பாடிக் கொண்டு வருகின்றார்கள். அந்த முறையிலே கோயிலைச் சுற்றிவருகின் றார்கள். மத்தளம் முழங்குகின்றது. மாதர் முழக்கம் அதனினும் மேலாக இருக்கின்றது. சில குரங்குகள் நினைத்தனவாம், ‘ஏதோ மேகம் திரளுகிறதுபோல் இருக்கின்றது. இடி இடிக் கின்றது. மழை வரும்போல் தோன்றுகிறது. நாம் மழை வரு வதற்குமுன், எங்கேனும் சென்று ஒதுங்கிக்கொள்ள வேண்டுமே’ என்று! கவலையுடன் மரத்தின் மேல் ஏறி, மேகமானது எந்த

இடத்தில் திரளுகின்றது என்று பார்த்துக் கொண்டு இருக்கின்றனவாம். இப்பொழுது அந்தப்பாட்டினுடைய போக்கைப் பாருங்கள்.

"சிலமந்தி அலமந்து மரமேறி
முகில்பார்க்கும் திருவையாறே"

ஏன் முகிலைப் பார்க்கின்றன வென்றால், நடனமாடுகின்ற மாதர்களுடைய ஒலியும், மத்தள ஒலியும் சேர்ந்து இடிமுழக்கம்போல் கேட்டமையால், அந்த மந்திகள் இவ்வாறு கலங்கி மேகத்தைப் பார்க்கின்றன. இந்த நடன மாதர்கள் அந்தக் கோயிலைச் சுற்றி நாள் தோறும் நடம் புரிந்து கொண்டு வருகின்றார்களே, ஏன் இந்த மடமந்திகள் மேலே பார்க்கவேண்டும்? தினமும் இந்த ஓசை கேட்கின்றதல்லவா? நடன மாதர் தினமும் சுற்றி வருகின்றார்கள்; மத்தளம் தினமும் முழங்குகின்றது!

அப்படி இருக்க மந்திகளுக்கு இந்த மயக்கம் ஏன் என்று கேட்கலாமன்றோ? இதற்காகத்தான் 'சிலமந்தி' என்று பாடினார் ஞானசம்பந்தர். எல்லா மந்திகளும் மரத்தின் மேலேறி மேகத்தைப் பார்க்கவில்லை. சில மந்திகள்தாம் ஏறின.

நடன மாடுகின்ற முழக்கத்தைத் தினமும் கேட்கின்ற மந்திகள் மரமேறி முகில் பார்க்கவில்லை. ஆனால் அயல் ஊரிலிருந்து திருவையாற்றுச் சோலையிலே விருந்துண்ண வந்த 'சிலமந்திகள்' அலமந்து மரமேறி முகில் பார்த்தன. முழுப் பாட்டினுடைய சுவையையும் உணர வேண்டும்.

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவழிந்திட்டு ஐமேலுந்தி
அலமந்த போதாக அஞ்சேலென்று
அருள்செய்வான் அமருங்கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட
முழவதிர மழையென்றஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரமேறி
முகில்பார்க்கும் திருவையாறே.

இத்தகைய திருஞான சம்பந்தர் தேவாரத்தைப் படியாமல் தமிழ் நாட்டிலே நாம் வாழ்வோமாளுல், நம்முடைய வாழ்வு பயனற்றதாகும் என்பது என்கருத்து. அவ்வாறே திருவாய் மொழியைப் படிப்போம். திருவாய் மொழியை இறைவனுக் காகப் படிக்கா விட்டாலும் தமிழுக்காகப் படியுங்கள். திருவள்ளுவருடைய நூலை எவ்வாறு படிக்கின்ருேமோ, எவ் வாறு அதன் தமிழுக்காகப் படிக்கின்ருேமோ, அந்த முறை யிலே நமது ஆன்ருேர்கள் அருளிச் செய்த சிறந்த நூல்களையும் கற்று உணரவேண்டும். தமிழ் இன்பத்தைப் போற்ற வேண்டும்.

வாழ்க தமிழ்.

---

இராகம் : நளினகாந்தி தாளம் : ஆதி

பல்லவி

வேதனை ஏனே வீணே — மனமே
சாதனை தானே சோதனை தினமே (வேதனை)

அனுபல்லவி

நாதனை நினைந்து நம்பி நீ யிருந்தால்
நன்மை நயந்திடும் துன்பம் தொலைந்திடும் (வேதனை)

சரணங்கள்

1. வஞ்சனை பொருமைலோபம் தடுத்தால்
நஞ்சுடையமன நண்பரை விடுத்தால்
தஞ்சமென்றவர்க்குத் தானங்கள் கொடுத்தால்
கஞ்சமலர்ப்பதம் கருத்திலே வைத்தால் (வேதனை)

2. பற்பலவிதநோய் பாரினில் தந்தாலும்
பவவினைபல பறந்து வந்தாலும்
உற்ருர்உறவினர் உனையே வைதாலும்
உய்யும் ஒருவகை உணராதிருந்தாலும் (வேதனை)

வி. கே. முத்தையா பிள்ளை, பி. ஏ., பி. எல்.,
வண்ணுர்பேட்டை, திருநெல்வேலி.

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 12, இதழ் 8-ன் தொடர்ச்சி]

I

## SAMBANDAR

(Tamil: TIRU JNANA SAMBANDAMURTI SWAMI)

8. நன்றுடையானைத்தீயதிலானைநரைவெள்ளே
றொன்றுடையானையுமையொருபாகமுடையானைச்
சென்றடையாததிருவுடையானைச்சிராப்பள்ளிக்
குன்றுடையானைக்கூறஎன்னுள்ளங்குளிரும்மே.

The next two stanzas, taken from two separate hymns associated with the great cities of Trichinopoly and Madura, both sacred places of Saivism, are set side by side in order to bring out a point which even the most sympathetic student may not ignore. Siva is commonly spoken of as all good, as in stanza 8, and yet not infrequently He includes, as in stanza 9, both good and its opposite. The pantheistic tendency even in these hymns causes God to be sometimes depicted as so all-embracing as to include evil as well as good.

8 All goodness hath He and no shadow of ill.
Grey-white is His bull, fair Uma shares His form.
His wealth is past searching. Chirapalli's hill
Is His, whom to praise keeps my heart ever warm

---

(To be Continued)

---

# "செம்மனச் செவிலி"

புலவர் திரு. சி. கோவிந்தசாமி அவர்கள்.
*தமிழாசிரியர், மாவட்ட மன்ற உயர்பள்ளி, கலசபாக்கம்.*

**கற்றறிந்தோர் ஏத்துங் கலி :**

'கல்தோன்றி மண்தோன்ருக் காலத்தே வாளோடு முன் தோன்றிய மூத்தகுடி'மகன் தமிழன். அவன் முதலில் தோன்றிய இடம் இலெமூரியாக் கண்டம். அவன் பேசிய மொழியே உலகில் முதன்மையும் தொன்மையும், திருந்திய பண்பும் நிறைந்தது என ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். தமிழ்மொழியின் இனிமையையும் ஏற்றத்தையும் கண்டு மேனுட்டவரும் இதனைக் கற்பாராயினர். அங்ஙனம் கற்றவர்களுள் ஒருவரே கால்டுவெல் பெருமகனுர். அவர் செந்தமிழைச் சீராகக் கற்று, உலகமொழி களிடை நம் ஒண்டமிழைச் சீர்தூக்கிப் பார்த்துத் தரங்கண்டு, தமிழ் ஓர் "உயர்தனிச் செம்மொழி" (Classical Language) என்ருர். எத்திசையும் புகழ் மணக்க இருந்த பெருந் தமிழ் நூல்கள் ஏராளம்; அவைகளுள் அலைகடலின் அழிபசிக்கும், கறையானின் காய்பசிக்கும், வேற்றவரின் காழ்ப்பிற்கும் இரை யானவை பற்பல. எஞ்சியவைகளே தொல்காப்பியம், எட்டுத் தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ் கணக்கு, ஐம்பெருங் காப்பியங்கள் ஆகும். தொகை நூல்கள் எட்டனுள், கற்றறிந் தோர் ஏத்தும், கவின் பெற்றது கலித்தொகையே. அதிற் காணப்படும் கருத்தோவியம் ஒன்றினை ஈண்டுக் காண்போம்.

**நெஞ்சங் கலந்த நேசத்தர் :**

ஆணுக்குரிய அருங்குணம் வாய்ந்தவன் அவன்....அரிவை யர்க்குரிய அழகெலாம் நிறைந்தவள் அவள்....பருவத்தின் எழில் கொஞ்சும் உருவத்தான் அவன்....பார்வையில் விடம்விஞ்சும் பருவத்தாள் அவள். சுருங்கச் சொன்னல், கூர்வேற்குமரன் அவன்....கொஞ்சுமொழி வள்ளி அவள்........ஊருக்கு மேற்கே

ஓங்கிய மாஞ்சோலையில் பண்டைவிதி கடைக்கூட்டக் கண் டனர்....கண்ணொடு கண்ணிணை நோக்கொத்தன....காதற்கொடி படர்ந்தது....இருவகை உறவும் இனிதே முடிந்தது....ஒருநாள், இருநாளல்ல, பன்னாளும் கூட்டம் நிகழ்ந்தது....இன்பவானில் எக்களிக்கும் சிட்டுக்கள் உறவை ஊரறிந்தது. அவர்கள் வாய் அமைந்திருக்குமா? வம்புபேசி வார்த்தையாடுவது தானே அதன் தொழில். அலரம்பு....தொடுத்து அணுவணுவாக அவர்கள் காதல் வாழ்வை கலைக்கக் கருதினர்....கூட்டங்கூட்டமாகக் குளத் தங்கரை – குப்பைமேடு – மந்தைவெளி – சந்தையிடம் – வயல் வெளி – வழிப்போக்கு எல்லா இடங்களிலும் இதே பேச்சு.... கொடுமைக்கு உள்ளங் குன்றினர் ஒருமையர். இத்தகையோர் இடையில் இனி ஒருக்கணமும் இருத்தல் கூடாது என்றெண்ணி இரவோடு இரவாகப் புறப்பட்டு விட்டனர். பகல் இரவு என்றும் பாராது பயணத்தைத் தொடர்ந்தனர். நால்வகை நிலங்கடந் தனர். பகல் பன்னிரண்டு மணியிருக்கும் பாலை நிலத்தில் அவர்கள் பாதங்கள் பட்டன.

'புயல்துளி மாறிய போக்கருவெஞ்சுரம் :

முல்லையுங் குறிஞ்சியும் முறைமை திரிந்து பிறந்த நிலம் பாலை. அங்கு பசுமையைப் பார்த்தறிய முடியாது. கரிந்த காரை யும், சூரையுமே காணப்படும். முற்றிய குரங்குகளும், வற்றிய யானைகளுமே அங்கு வாழ்வன. மரையாவும் மானும் அருகித் தோன்றும். வழிச்செல்லும் – வம்பலரின் பொருளைக் கைப்பற்றி வாழும் "ஆறலைக் கள்வரே" மிகுதி. அவர்கள் வழிச்செல் வோரிடம் பொருள்இல்லாவிட்டாலும் அவர்களை வெட்டிவீழ்த்தித் தலையும் உடலும் துடிப்பதைக் குடும்பத்தோடு குந்திக் கண்டு மகிழ்வராம். என்னே! இவர்தம் கைத்திறம். அவர்கள் கொடு மைக்கு அஞ்சிப் பறவைகளும் அவர்கள் வாழும் வழியிற் செல்லாவாம்,

"கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர்
துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வெளவலிற்
புள்ளும் வழங்காப் புலம்புகொ ளாரிடை"

– *கலித்தொகை–பாலை–4*

அந்நிலம் கதிரவனின் ஆட்சிக்கு உட்பட்டது என்ருல் சொல்ல வேண்டுமா? வறியன் இளமைபோல் வாடிய கொம்புகளொடு சிறியவன் செல்வம் தன்னைச் சேர்ந்தவர்க்கு உதவாததுபோல, நிழலின்றி, முறைதவறிய மன்னனின் முடிவுபோல் வேரொடு உலர்ந்த மரங்களே எங்கும் காணப்பட்டன. கொடுங்கோலன் கோல் எந்த அளவிற்குக் குடிமக்களைத் துன்புறுத்துமோ, அந்த நிலையில் பாலை நிலத்தைப் பாழ்படுத்திக் கொண்டிருந்தான்-பகலவன்....வேட்கை தீர்க்க நீரோ?....பசிபோக்க சில் பதமோ.... களைப்பாற நிழலோ....கண்குளிரும் காட்சியோ காண்பது அரிது... இந்நிலத்தைக் கடந்து செல்லக் காதலர்கள் எவ்வளவு துன்பப்பட்டார்களோ?...

## செல்வியைக் காணுத செவிலித்தாய்:

நள்ளிரவு...நாய்களின் தொல்லை மிகுதி....ஆழ்ந்த உறக்கத்திலிருந்த அவள் விழிகளைத் திறந்தாள்....திடுக்கிட்டாள், எழுந்து நின்ருள்....கன்றிழந்த காராபோன்று கலக்கம் அடைந்தாள் .... நெஞ்சிலனல் கொண்டாள் ... குமைந்தாள் .... குமுறினுள் .... மெய்வெயர்த்தாள் ... இத்தனைக்கும் காரணம் என்ன? ... பாயில், பக்கத்தே படுத்திருந்த தன் மகளைக் காணேும்?... முந்தியநாள் இரவிலெல்லாம் தான் ஒரு பாயிலும், தன் மகளொரு பாயிலும் படுத்துறங்குவார்கள்...ஆனுல் இன்றிரவோ, தாய், மகள் மீது ஐயங்கொண்டு, அவளையும் தன் பாயிலேயே படுக்க வைத்து, கைகளால் இறுகக் கட்டியணைத்து அல்லவா காத்திருந்தாள்....கைக்கட்டைத் தளர்த்தி, கண்களை இமைத்திரையால் மூடிவிட்டு....ஏமாளியாக ஆக்கிவிட்டல்லவா போய்விட்டாள். இப்படிச் செய்தால் செவிலித்தாய்க்கு மட்டுமா? எல்லோருக்கும் கோபம் எழத்தானே செய்யும்...

அருமணி இழந்த நாகம்போல் அலமந்த செவிலி, இருள் என்றும் பாராது, மருள் எண்ணங் கருதாது; யாரிடமும் சொல்லாது, அக்கணமே மகளைத்தேடப் புறப்பட்டாள். காடு, மலை, வயல், கடல் நிலங்களையெல்லாம் கடந்தாள். அவள் உள்ளத்தில் துயரவிருள் தொகையாகப் பற்றிப்படர்ந்து கொண்டிருந்தது...மகளைப்பற்றிக் கேட்டால் உற்ருர்க்கும், நற்ருய்க்கும்,

வரார்க்கும் என்னென்று சொல்வது... என்ற சிந்தனை ஒரு புறம்... ஏந்திழையாள் இக்கொடிய வழியில் எப்படிச் சென்றுளோ? என்ற எண்ணம் வேறொரு புறம்.... அவள் செய்த சதியின் சாயல் மற்றொரு புறம்... உள்ளத்தே சூழ்ந்துவர நடந்தாள்... நடந்து கொண்டேயிருந்தாள்... ஆம் அப்போது தான் அவளுக்கு நினைவு வந்தது.... இரவு படுத்த கொஞ்ச நேரங்கழித்து, தன் கைகளால் மகளுடம்பை அணைக்கும் சமயத்தில்,... "அம்மா! அம்மா!! உடம்பு வேர்க்கின்றது கையை எடுங்கள்" என்று சொன்னாளே, அந்த சொல்... மார்கழித் திங்கள்..\ குளிர் மிகுந்த இரவு... மகள் ஏன் அப்படிச் சொன்னாள்? இப்போதல்லவா புரிகிறது. அவளேன் அப்படிச் சொன்னாளென்று. தலைவனின் கைகள் கட்டியணைத்தால் இன்பமாக இருக்கிறது... என்பதனை நன்குணர்ந்த அவள் என் கைகளால் இன்பமுண்டாகவில்லை... கையை, எடு அம்மா! என்று சொல்லுவதற்கு பதில் வேர்க்கிறது என்று குறிப்பாகச் சொல்லியிருக்கிறாள்... இந்த எண்ணம் முன் இரவில் ஏன் எனக்கு எழவில்லை? எழுந்திருந்தால் உறங்காது அல்லவா... காத்திருப்பேன்......இப்படி, அவள் எண்ணி முடிக்கும்போது தான், பாலை நிலத்தில் தன் பாதங்கள் பயணஞ் செய்வதையும், பகலவனின் கதிர்கள் பழுத்து நிற்பதையும், அறிந்தாள். யாராவது எதிர்ப்படுவார்களா? மகளைக் கண்டோம் என்று சொல்வார்களா? என ஏங்கியவாறே எடுத்தடி வைத்தாள்.

முதல்வனை நாடும் முக்கோற்பகவர் :

சிற்றின்பச் சேற்றை வெறுத்துப் பேரின்பத்தை நாடுபவர்கள். அகமும் புறமும் தூய்மை பெற்றவர்கள். பகவனைத் தேடும்.... அவர்களும் பாலைநிலத்தில் நடந்து வருகின்றனர். கதிரவனின் வெம்மை செம்பொன் மேனியிற் படாதவாறு தடுக்க கையில் குடை...... புண்ணியப் புனல் நிறைந்த கமண்டலம்.... அரன், அயன், அரி, ஆகிய மூவரும் ஒருவரே என்பதை உலகவர்க்கு உணர்த்தும் முக்கோல்... இதைத் தோளிலே சுமந்து... நல்லியல் மாணவர்கள் சூழ்ந்துவர... பகவர் பயணத்தைத் தொடர்கின்றார்.. கருத்தொருமித்த காதலர் சென்ற திசைக்கு எதிர்த்திசையை நோக்கிச் செல்

கின்ருர்... அவரைஎதிர்ப்பட்ட செவிலி எழுப்பினுள் கேள்வியை.... சொல் வெளிவருவதற்குள் கண்களில் நீர்வழிந்தோடியது.... கைகுவித்து வணங்கி, "ஐயா, பெரியீரே! பாலைவழியில் பரமனை நாடிவரும் தாங்கள், என் மகள் ஒருத்தியும், பிறள் மகன் ஒருவனும்... உணர்ச்சியொத்துப் பழகியவர்கள்....ஊரறியக் கிளம்பி விட்டார்கள்... அவர்கள் இருவரையும் இவ்வழியில் பார்த்தீர்களா?" என்ருள்...........

அம்மா, அழாதே! நீ, ஆண்மகனுக்குரிய அழகெல்லாம் நிரம்பிய தலைவனேடு செல்லும் சேயிழையாளின்... தாய் என்று கருதுகின்ருேம்....

ஆம், ஐயா! யான் அணியிழையாளின் தாய்தான்.... ஆருக வழிந்தோடும் கண்ணீரே அறிவிக்க வில்லையா? என்ருள்...

இருவரையும் நாங்கள் காணுமல் இல்லை என்ருர் பகவர்... இல்லை, என்ற சொல்லைமட்டும் செவியில் வாங்கிய செவிலி திடுக்கிட்டாள்.... என்ன... பார்க்கவில்லையா?...

சொல்வதைப் பொறுத்துக் கேள்.... தாயே! கண்டோம்.. கண்டீர்களா?... ஆம். அவர்கள் இருவரும் இணைந்து செல்வது 'அறம்' என்பதைக் கண்டோம்...

கேட்ட செவிலிக்கு கையாற்றின் மேல் கடுஞ்சினமும்... பொங்கியது... எது அறம்? என் மகள் ஏதுமறியாதவள்... இற்றைநாள் வரையிலும் பாற்சோற்றை யான் ஊட்டத்தான் அவள் உண்பாள்... கருத்தறியாக் கன்னியைக் காமுகன் மயக்கிச் செல்வதுதான் அறமா? எங்களையெல்லாம் இந்த அவலநிலைக்கு உள்ளாக்கிச் செல்வதுதான் நீதியா? என்று அடுக்கினுள்....

அம்மா!.... உன் மகளை, நீ, ஏதும் அறியாதவள் என்று கருதலாம்... அவளும் அறிய வேண்டியதை அறிந்து கொள்ளாது இருக்கலாம்.... பருவம் விடவில்லையே... அது அவளை அறிந்தவளாக அல்லவா ஆக்கி அகிலத்திற்கு அளிக்கின்றது இவ்வளவு கேட்டும் அவள் இதயம் அமைதி பெறவில்லை...

முத்தெழில் உவமைகள் மூன்று :

முக்கோற் பகவர் மேலும் மொழிந்தார். தாயே! நான் சொல்வதைச் சற்று அமைதியொடு கேட்டு உன்னிப்பார். மலே. மங்கை மணிவயிற்றிலே பிறக்கிறது சந்தனம்...மணம் செறிந்த சந்தனத்தால் மலேக்கு ஏதாவது பயன் உண்டா?.... சாந்தாக அதை அரைத்துப் பூசிக்கொள்வார்க்கே பயன்... கொடுக்கிறது.... மலே, சந்தனத்திற்குத் தாயாம் தன்மை உடையதே.... அதற்காக அம்மலே, சந்தனம் நமக்குப் பயன்படவில்லேயே என்று ஏங்குதல் கூடாது... அப்படி ஏங்குவது இயற்கையும் ஆகாது... அதுபோலத்தான் நும்மகளும் பயன்படும் பருவத்து நுமக்குப் பயன் படாள்.

முந்நீர் ஈன்றெடுக்கும் முத்து... யாவரும் விரும்பும் வெண்மை வண்ணமும், முழுமையும் பெற்றது எங்கே? கடலில் தான்.... இருப்பினும் முத்தின் எழிலே முந்நீர் அனுபவிக்கிறதா? திறமையுள்ளோர் அதை அடைந்து அணிந்து மகிழ்கிருர்கள்.... அவர்களேயே அது இன்பத்துள் ஆழ்த்துகிறது.... அதுபோலத் தான், நும்மகளும் பயன்படும் பருவத்து நுமக்குப் பயன்படாள்.

ஏழுநரம்புகள் இறுகக்கட்டி எழிலாக அமைக்கப்பெற்ற யாழிலே எழும்புகிறது இன்னிசை.... அவ்விசையை யாழ்கேட்டு இன்பம் அடைய முடிகிறதா? இல்லே.... அதன் இனிமையை அனுபவிப்பவர்கள் அதை எடுத்து வாசிப்பவர்களே... அது போலத்தான் நும்மகளும் பயன்படும் பருவத்து நுமக்குப்பயன் படாள்....

சந்தனம், முத்து, இசை, ஆகிய இம்மூன்று பொருள்களேயும் எண்ணிப்பார்.... [சந்தனம்: பிறப்பிடம் - மலே, சேரிடம் – பூசிக்கொள்வோர், முத்து: பிறப்பிடம்-கடல், சேரிடம் – அணிப வர், இசை: பிறப்பிடம் – யாழ், சேரிடம் – எடுத்து வாசிப்போர்] நும் மகளும் பிறந்தாள்; நீங்களும் நல்லன்போடு வளர்த்தீர்கள்; .... அவள் கூந்தலும் பருவமும் குழைத்த சந்தனத்தின் மணத்தைப் பெற்றுவிட்டன... மேனியும் மூரலும் முத்தொளி கவின்று விட்டன... மொழி, இசையும் தோற்கும் ஈடிலாஎழில் எய்தி

விட்டது... இத்தகையாள் வாழ்வு பிறனுக்குப் பயன்படும் பக்குவநிலையைப் பெரிதும் உற்றது.... இதுவரை குடும்பத்த வரைக் குதூகலப்படுத்தியவள் அறவாழ்விற்குரிய ஆன்ருேனைத் தேர்ந்தெடுத்துக் கொண்டாள், அதுதான் அறம், அதனுல் தாயே மகளைப்பற்றிய கவலையை மறந்துவிடு......

முனிவர் கூறிய முடிவுரை :

இவ்வளவையும் கேட்ட பின்னுவது அவள் இதயம் குளிர்ந்ததா? இல்லை.... கவலைக்கோடுகள் கன்னத்தின் ஓரங்களில் காணப்பட்டன... பகவர் விட்டாரில்லை. தாயே! நும், மாண்பு மிகு மகள், சிறந்த செம்மலை நாடி அவனெடு பன்னுளும் கூடி... அவன்வழியே தலைப்பட்டு விட்டாள்.... தலையாய கற்பு நெறியிலே கலந்த அவளை எண்ணியெண்ணி ஏக்கங் கொள்ளாதே... அறங்களில் ஆதியாய், ஆணிவேராய் நிற்பது கணவனெடு கூடிக் காதல்வாழ்வு வாழ்வதுதான்... 'அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை'-குறள்...என்ற அருந்தமிழ் மேதை அறவுரையை ஆழ்ந்து பார், என்று முடித்தார். பகலவனைக் கண்ட பனிபோல் அவள் கவலை மறைந்தது... குறைதீர்ந்தவளாய் கோற்றொடியாள் போயினுள். இக்கருத்துக்களை எடுத்துமொழியும் பாவினைத் தந்தபாவலர் பாலைபாடிய பெருங்கடுங்கோ... இதோ அவர்தம் இன்சொற் பாமாலை!–

"எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழல்
உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவலசைஇ வேருேரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை யந்தணீர்

வெவ்விடைச் செலன்மாலை யொழுக்கத்தீ ரிவ்விடை
என்மக ளொருத்தியும் பிறண்மக னொருவனுந்
தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சிய
ரன்னு ரிருவரைக் காணிரோ பெரும!
காணே மல்லேங் கண்டனங் கடத்திடை

யாணெழி லண்ணலோ டருஞ்சுர முன்னிய
மாணிழை மடவரல் தாயிர்நீர் போறீர்;

பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதா மென்செய்யும்
நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே;

சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவைதா மென்செய்யும்
தேருங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே;

ஏழ்புண ரின்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதா மென்செய்யும்
சூழுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே;

எனவாங்கு,

இறந்த கற்பினட் கெவ்வம் படரன்மின்
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்
அறந்தலை பிரியா ஆறுமற் றதுவே." ஆறு-வழி.

குறிப்பு:— கரகம் - கமண்டலம், அருஞ்சுரம் - கடத்தற்கரிய பாலை நிலம். சுவல் - தோள், மடவரல் - இளமை நிறைந்த பெண். கொளை நடை - ஒழுக்கம். சாந்தம் - சந்தனம். படுப்பவர் - பூசிக்கொள்பவர். வெவ் விடை - கொடிய காடு, தேருங்கால் - ஆராயுமிடத்து, எவ்வம் - துன்பம்,

---

### திருப்பனந்தாள் - ஸ்ரீ காசி மடம்

## ‘ திருமுறை வெளியீடுகள் ’



| | | ரூ. ந. பை |
|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை ... | 0 06 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) ... | 3 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் ... | 3 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும்) (புதிய பதிப்பு) ... | 2 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் .. ... | 2 25 |
| 6* | சுந்தரர் தேவாரம் (புதிய பதிப்பு) .. ... | 1 30 |
| 7* | திருவாசகம் (புதிய பதிப்பு) .. ... | 0 50 |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) ... | 2 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் (மூலம்மட்டும்) ... | 0 56 |
| 10* | திருமந்திரம் .. (புதிய பதிப்பு) ... | 2 25 |
| 11 | பதினோராந்திருமுறை .. ... | 1 25 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) ... | 0 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் ... | 0 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) ... | 2 50 |
| 15* | அகத்தியர் தேவார்த்திரட்டு ... | 0 37 |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) ... | 3 00 |
| 17 | தாயுமான சுவாமிகள் பாடல்-குறிப்புரையுடன் (அச்சில்) ... | |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) ... | 1 75 |
| 19 | கந்தபுராணம் – முதல் மூன்று காண்டங்கள் .. ... | 2 75 |
| 20 | .. யுத்த தேவகாண்டம் .. ... | 2 00 |
| 21 | .. தக்ஷகாண்டம் .. ... | 1 50 |
| 22 | கந்தபுராண வசனம் (அச்சில்) | |
| 23 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் ... | 0 25 |
| 24 | கந்தரனுபூதி ... | 0 13 |
| 25 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் ... | 0 37 |
| 26 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் ... | 0 06 |
| 27 | கந்தர் கலிவெண்பா - மூலமும் – உரையும் ... | 0 37 |
| 28 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது ... | 0 50 |
| 29 | சகலகலாவல்லிமாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது ... | 0 06 |
| 30 | சிவஞான சித்தியார், ஹிந்தி மட்டும் ... | 1 00 |
| 31 | திருக்குறள் - அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் ... | 1 50 |
| 32 | திருக்குறள் – பொருட்பால் .. ... | 2 50 |
| 33 | திருக்குறள் – காமத்துப்பால் .. ... | 1 00 |
| | ஷை 31, 32, 33 திருக்குறள் 3 புத்தகமும் ... | 4 00 |

Registered With the Registrar of Newspapers for India
Under No R. No. 1485/57.
Regd No. M. 5574



| | | | |
|---|---|---|---|
| 34 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் | ... | 0 75 |
| 35 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... | 0 13 |
| 36 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... | 0 75 |
| 37 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... | 0 37 |
| 38 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனுட்சியம்மை இரட்டைமணி மாலை - மதுரை மீனுட்சியம்மை குறம் | ... | 2 75 |
| 39 | திருவாரூர் நான்மணிமாலை – முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் } | ... | 1 25 |
| 40 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை - தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... | 1 00 |
| 41 | பண்டார மும்மணிக் கோவை – காசிக் கலம்பகம் – சகலகலாவல்லி மாலை } | ... | 1 00 |
| 42 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... | 0 75 |
| 43 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... | 0 50 |
| 44 | தமிழிசைப்பாக்கள் [அச்சில்] | | |
| 45 | பெரியபுராணம் – உரைநடை | ... | 2 00 |
| 46 | திருவிளையாடற் புராணம் – உரைநடை | ... | 2 25 |
| 47 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... | 0 50 |
| 48 | அபிராமி பட்டர் பிரபந்தம் (மூலம்மட்டும்) (அச்சில்) | ... | |
| 49 | திருக்கயிலைத் திருமுறை | ... | 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... | 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை | ... | 0 13 |
| 52 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... | 1 37 |
| 53 | ஷ ஷ பொருட்பால் 2-ம் பதிப்பு | ... | 2 75 |
| 54 | ஷ ஷ காமத்துப்பால் ஷ | ... | 1 20 |
| 55 | அபிராமி அந்தாதி – தெளிவுரையுடன் | ... | 0 50 |
| 56 | மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... | 0 50 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்,
"தியாகராஜ விலாசம்" 53, பிள்ளையார் கோயில்தெரு,
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறி. * இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் - '61.